REGD. No. M. 1196.





# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

**Vol. 29.** பொருளடக்கம். **No. 12.**

தாரண௵ ஆனி௴ ௧௨

உள்ளடக்கம். பக்கம்









"திமிர் பிடித்த ஆடவர் சிலரது காம வெறிக்கிரையாகிய மகளிரே நாளடைவில் தாசிகளாகப் பரிணமித்தனர். சுயநல மிக்க ஆடவர்கள் தங்கள் கூடா வொழுக்கத்துக்கு இன்னும் சௌகரியத்தை யேற்படுத்திக் கொள்ள கடவுள் பெயரையும், சமயத்தின்பெயரையும் ஆதரவாகக் கொண்டனர். ஆதலால், இக் கூட்டம் அதிகமாகி ஒரு தனி சமூகமாய் விட்டது. உலக உற்பத்திக்கே—மனித வளர்ச்சிக்கே—நிலைக்களனாக உள்ள தாய்மைத் தன்மை வாய்ந்த பெண்ணினத்தில் மிகக் கேவலமான தாசிகள்—வேசைகள் என்று ஒரு பிரிவு உண்டாயிருப்பதற்கு இதுதான் காரணம்."

என்கிறாள் கதாநாயகி ரமணி.



"தாசிகள் என்றால் ஜன சமூகத்தை அழிக்கும் விஷப் புழுக்கள் என்பது என் எண்ணம். கொலைகாரர்கள், கொள்ளையடிப்பவர்கள், கள்ளர் முதலியோரைக் காட்டிலும் இத் தாசிகள் மிகக் கொடியவர்கள்; ஏனென்றால், கொலை, கொள்ளை முதலிய மாபெரும் பாதகங்களைச் செய்பவர்களால் ஏற்படும் தீமையைக் காட்டிலும் ஜன சமூகத்துக்கு இந்தத் தாசிகளால் உண்டாகும் தீமைகள் அதிகம்."

என்கிறான் கதாநாயகன் கலியாணசுந்தரம்.

# ஆனந்தபோதினி

ஒரு சிறந்த மாதாந்தத்
தமிழ்ச் சஞ்சிகை

“எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.”—திருவள்ளுவர்.

(தொகுதி 29.)

சுபானுவரு ஆடிமீ முதல் தாரணவரு
ஆனிமீ வரையில்
1943வரு ஜூலைமீ முதல் 1944வரு ஜூன்மீ வரையில்

நா. முனிசாமி முதலியார்,
“ஆனந்தபோதினி” ஆபீஸ்.
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு,
சௌகார்பேட்டை, மதராஸ்.



விலை பைண்ட் ரூபா 2-12-0 | 1944 | தபாற் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS

---

From Rao Saheb Late T. Ramakrishna Pillai, Avl., B.A., F.M.U., F.R.H.S., Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of "ANANDA BODHINI" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915.*
THOTTAKADU HOUSE.

(Sd.) T. RAMAKRISHNA PILLAI.

---

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, and Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "ANANDA BODHINI." It is conducted on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.*

(Sd.) A. C. PRANATARTIHARA IYER.

---

We have received the current number of the Tamil monthly "ANANDA BODHINI," containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—HINDU 22—9—15.

---

Dear Sir,

Your Tamil monthly entitled "ANANDA BODHINI"......................is written in EASY, CLEAR and READABLE style, WELL-SUITED, PARTICULARLY, to LADIES who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be READ and RE-READ from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number i.e., pages 288 and 289. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes. ... ... ... ... ... It is very much to be envied that there should be over 10,000 subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

TRIVANDRUM,
21—1—17.

A. V. SUBRAMANIA AIYAR,
F.N.S.A. (Lon.), F.G.I. (Birm.)

# ஆனந்தபோதினி

## 29-ம் வருடத்திய விஷய அட்டவணை

# ஸ்ரீமத் கம்பராமாயண வசன சங்கிரகம்

## சப்த காண்டங்கள் அடங்கியது

**ஸ்ரீ இராமர் பட்டாபிஷேகம் ஆப்டோன் படம் ஆர்ட் பேப்பரில் போட்டு உள்ளே சேர்க்கப்பட்டிருப்பதோடு, மேல் காலிகோ பைண்டு முன் பக்கத்திலும் மேற்படி படம் மிக அழகாகப் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.**

**மிக்க திருத்தங்களோடு உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது**

ஸ்ரீ இராமபிரான் சரிதையை விரித்துக் கூறும் இந்த இராமாயண மானது மிக்க புண்ணிய கதை யென்பது உலகறிந்த விஷயம். இதனைப் பாராயணஞ் செய்வதா லுண்டாம் பயன்கள் அளவிடற் கரியனவாம். இதனைப் பக்தி சிரத்தையுடன் படிப்பவர்க்கு உலகத்தில் விரும்பக்கூடிய பொருள்களெல்லாம் கை கூடும், உயர்ந்த அறிவுண்டாகும், கீர்த்தி அதிகரிக்கும்; மோக்ஷத்தை அடையும் மார்க்கம் ஏற்படும்; இலக்ஷுமி கடாக்ஷம் உண்டாகும்.

இன்னும் இந்த இராமாயணத்தைப் பக்தியுடன் படித்து முடிக்கு மிடங்களில் கலியாணம் முதலிய மங்கள காரியங்கள் நிறைவேறும்; புத்திர பாக்கிய முண்டாகும்; பசு, பால், தானியம் முதலியன விருத்தியாகும்; பில்லி, சூனியம், தீராத நோய், பூத பைசாச உபத்திரவங்கள் முதலியவை நீங்கும்; பகை நீங்கும், விஷ ஜந்துக்கள் அணுக மாட்டா; பஞ்சம் நீங்கும், நல்ல மழை பெய்யும்; துக்கமான சம்பவங்கள் நீங்கி மிக்க ஆனந்த முண்டாகும். இவை யெல்லாம் உண்டாவது நிச்சயம். இராமாயணம் படித்த பற்பல இடங்களில் இப் பயன்கள் உண்டாகி யிருக்கின்றன. இவற்றை ஒவ்வொருவரும் அனுபவத்தில் உணர்ந்து கொள்ளலாம். **இதன் விலை ரூபா 2.**

# தத்வஸங்க்ரஹ ராமாயணம்

இது ஸம்ஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட அருமையான நூல். இதனை ஒரு முறை படிப்பவர்கள் இம்மை மறுமை யென்னும் இரு வகை வாழ்விற்குரிய சாதனங்களை யுணர்ந்து மக்களாய்ப் பிறந்த தாம் அனுஷ்டிக்க வேண்டிய ஒழுக்கங்களைக் கைக்கொண்டு பகவானுடைய திருவருட்குரியவராக விளங்குவர் என்பதில் ஐயமில்லை. இந்த கிரந்தம் துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலன நிமித்தம் உலகத்தில் சத்யவந்தனைக விளங்கிய தசரத பூபதிக்கு ஸ்ரீராமனக அவதரித்த ஜகத்பிரபுவின் குணதிசயங்களைப் பற்றிப் பேசுவது. **இதன் விலை ரூபா 4-0-0**

# கைவல்ய நவநீத வசனம்

ஆன்மாக்கள், மாயையினின்றும் விடுபட்டு மோக்ஷ சாதனத்தை அடைய கருணாநிதியாகிய கடவுள் அருளிய வேதத்தின் உட்பொருளைத் தழுவிப் பல மகான்கள் பல நூல்களை இயற்றி யிருக்கின்றனர். அவற்றுள் ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகள் இயற்றிய கைவல்ய நவநீதமும் ஒன்று. அவற்றை யொட்டி இந்நூல் எளிய தமிழ் வசன நடையில் ஆரணி குப்புசாமி முதலியாரால் எழுதப்பட்டது.

**இதன் விலை ரூபா 1—8—0.**

---

பரப்பிரஹ்மணே கம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

| | | |
|---|---|---|
| தொகுதி 29 | தாரண௵ ஆனிமீ கவ. 1944௵ ஜூன்மீ 14உ. | பகுதி 12 |


## கடவுள் வணக்கம்.

எம்மனா! என்குலதெய்வமே!
என்னுடைய நாயகனே!
நின்னுளேனாய்ப் பெற்றநன்மை
இவ்வுலகினில் ஆர்பெறுவார்?
நம்மன்போலே வீழ்த்தமுக்கும்
நாட்டிலுள்ள பாவமெல்லாம்
சும்மெனாதே கைவிட்டோடித்
தூறுகள் பாய்ந்தனவே. (1)

கடல்கடைந்து அமுதம்கொண்டு
கலசத்தை நிறைத்தாற்போல்
உடலுருகிவாய் திறந்துமடுத்து
உன்னைநிறைத்துக் கொண்டேன்
கொடுமைசெய்யும் கூற்றமும்
என்கோலாடி குறுகப்பெறா
தடவரைத்தோள் சக்கரபாணீ!
சார்ங்கவிற் சேவகனே.! (2)

பொன்னைக்கொண்டு உரைகல்மீதே
நிறமெழ வுரைத்தாற்போல்
உன்னைக்கொண்டு என்நாவகம்பால்
மாற்றின்றி உரைத்துக்கொண்டேன்
உன்னைக்கொண்டு என்னுள்வைத்தேன்
என்னையும் உன்னிலிட்டேன்
என்னப்பா! என்னிருடீகேசா!
என்னுயிர்க் காவலனே! (3)




# தேசபக்தி யற்றோர் அன்னியரே!

"பெற்ற தாயும் பிறந்தபொன் னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே!"

என்றார் பாரதியார். மனிதனாயுள்ள ஒருவனுக்குப் பெற்ற தாயையும், பிறந்த நாட்டையும் விட, சிறந்த தொன்றில்லை. ஆகவே, அவன் மற்ற பொருள்களிடத்து வைத்துள்ள அன்பைக் காட்டிலும் அதிக அன்பைத் தன்னை ஈன்றெடுத்த தாயினிடத்தும் தான் உதித்த நாட்டினிடத்தும் வைக்கவேண்டியவனா யிருக்கிறான்.

இப்பூவுலகில் பெற்ற தாயிடம் அன்பும் நன்றியும் செலுத்தாதவன் வேறு யாரிடத்தும் நன்றி விசுவாசம் காட்ட மாட்டான் என்பது திண்ணம். பெற்ற தாயாரிடம் நன்றியும் அன்பும் காட்ட எப்படி ஒருவன் கடமைப்பட்டிருக்கிறானோ அதுபோல, பிறந்த நாட்டினிடமும் பக்தி கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறான். ஏனென்றால், பெற்ற தாயைப் போல, பிறந்த நாடும் ஒருவன் தோன்றி வாழ்வதற்கு ஆதாரமா யிருக்கிறதல்லவா!

பெற்ற தாய்க்கு ஒன்று உற்றால், அதைத் தவிர்க்க எதையும் செய்யலாம் என்று அற நூல்கள் கூறுகின்றன. பெற்றவளுடைய பசியைத் தீர்க்க ஒருவன் களவு, கொள்ளையைக்கூட கையாளலாம்; அதில் தவறு ஒன்றுமில்லை என்று நீதி நூல்களும் விவரிக்கின்றன. தாயைப்போலவே, தான் பிறந்த தாய் நாட்டின் பெருமையை நிலைநாட்ட, தாய் நாட்டுக்கு எவ்வித அகௌரவ நிலையும் ஏற்படாதபடிப் பாதுகாக்க ஒவ்வொருவனும் முயல வேண்டியது அத்தியாவசியம் என நாம் தனியாகக் கூறவேண்டியதில்லை. தாய் நாடு சீரும் சிறப்புமாய், பேரும் பெருமையுமாய் இருந்தால் தான், அதில் வாழும் மக்களுக்கும் பெருமையாகும். தாய் நாட்டின் உயர்வுக்காக, தாய் நாட்டுச் சுதந்திரத்துக்குப் பிற நாட்டினரால் கேடுண்டாகாதவாறு தடுக்க, உலகிலுள்ள ஒவ்வொரு தேச

மக்களும் எவ்வளவு தூரம் பாடுபட்டிருக்கிறார்கள் என்பதை முற்கால, தற்கால சரித்திரங்களிலிருந்து அறியலாம். பண்டைக்கால தேச சரித்திரங்களெல்லாம் மக்கள் தாங்கள் பிறந்த நாட்டின் பெருமையைக் காப்பாற்றுவதற்காக சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காகச் செய்த தியாகங்களையும் நடத்திய போராட்டங்களையும் தானே விவரித்திருக்கின்றன ?

பிற தேசங்களிலுள்ள மக்களெல்லாம் இன்று பல துறைகளிலும் முன்னணிக்கு வந்திருக்கிறார்கள் என்றால், அதற்கு முக்கிய காரணம் அவர்களிடமுள்ள தேசபக்தியே யாகும். தேச முன்னேற்றத்தில் கருத்தில்லாத மக்கள் எந்தத் துறையிலும் முன்னேற்றத்துக்கு வர முடியாது. தேசபக்தி விஷயத்தில் நம் நாட்டு மக்கள் நிலை என்ன ? ஐயோ ! அந்த வெட்கக் கேட்டை என்னென்று சொல்வது? தேசபக்தி கொண்டவர்கள் நம்மில் வெகு சிலரே யாவர். அவர்களை வெகு சுலபமாக விரல்விட்டு எண்ணிவிடலாம். நம் நாடும் மக்களும் அடிமையுற்றிருப்பதற்குரிய பல காரணங்களில், நம் மக்கள்பால் தேசபக்தியில்லாமை முக்கிய காரணமாகும். தாதாபாய் நௌரோஜி, கோகலே, திலகர், மகாத்மா காந்தி முதலிய தேசத் தேசத்தலைவர்களும், காங்கிரஸ் மகாசபையான தேச மகா சபையும் ஏற்பட்டு, நம் நாட்டு விடுதலைக்காகக் கிளர்ச்சி செய்து வருவதன் பயனாக, நம்மவரில் ஒரு சிலரிடையே, தேச பக்தி ஏற்பட்டிருக்கிறது.

நம் நாட்டிலுள்ள மக்களில் பலர் இந்நாட்டைத் தங்கள் தாய் நாடாக மதிப்பதில்லை. இந்நாட்டுக் கலை நாகரிகங்களைத் தங்களுடையனவாக எண்ணுவதில்லை. மேனாட்டிலுள்ள யூத ஜாதியாரைப்போல, அவர்கள் தாங்கள் எவ்வகையாலேனும் பெரும் பொருள் திரட்டுவதிலும், உல்லாசமாக வாழ்க்கை நடத்துவதிலுமே கருத்தாயிருக்கின்றனர். நம் முன்னோரில் சிலர் காலப்போக்கை யொட்டியும் வேறு காரணங்களை யுத்தேசித்தும் வகுத்துள்ள சாதி, சமயப்பிரிவுகளை இவர்கள் பிரமாதமாகக் கருதி, வேற்றுமையை வளர்த்து வருகின்றனர். இதனால், நாட்டுப்பற்றுக்கு உள்ளத்தில் இடமில்லாமல் போகிறது. நம் நாட்டைச் 'சர்வதேச வியாபாரப் பண்ணை' யாகக் கருதி, பல தேசத்தினரும், மதத்தினரும் வந்து குழுமி யிருப்பதால், நம் மக்களிடையே பிற சமயக் கொள்கைகளும், நடை யுடை பாவனைகளும் பிற கலப்புகளும் ஏற்படுவது இயற்கை. அம்முறையில் நம் சகோதர மக்களே பலர் மதமாற்றங் காரணமாக கிறிஸ்தவர்களாகவும், முஸ்லிம்களாகவும் மாறியிருக்கின்றனர். சமயக் கொள்கை மாறினாலும், ரத்தக் கலப்பும், நாட்டின் பிறப்புரிமையும் எங்கிருந்து போய்விடும்? ஆனால், இவ்

வுண்மை யறியாத கிறிஸ்தவ சகோதரர்களும், முஸ்லீம் சகோதரர்களும், தாங்கள் இந் நாட்டைச் சேர்ந்தவர்க ளல்லவென மூடத்தனமாகக் கருதுகின்றனர். கிறிஸ்தவரா யுள்ளோருக்கு தாங்கள் பாலஸ்தீனத்தி லிருந்து நேரே வந்ததாக எண்ணம். முஸ்லிம்களுக்கோ தாங்கள் அரபி நாட்டிலிருந்து (மக்கா, மதீனு) வந்ததாகப் பெருமிதம். தாங்கள் பரம்பரையாக இந்தியாவைச் சேர்ந்தவர்கள் ; தாங்கள் இந்திய ஜாதியினர் என்பதையே அவர்கள் மறந்துவிட்டனர். அதனுல் தான், படித்தவர்களும் செல்வந்தர்களுமா யுள்ளோர் தாங்கள் பட்டம், பதவிகளைப் பெறுவதறகாகத் தூண்டிவிட்டு வரும் வகுப் புணர்ச்சிக்கு இரையான கிறிஸ்தவர்களும், முஸ்லிம்களும், இந்திய சகோதரர்களை அன்னியர்போல் நினைத்துப் பகைமை பாராட்டி வருகின்றனர். ஆகவே, நாளடைவில் இந்தியர்களும், கிறிஸ்தவ, முஸ்லிம் சகோதரர்களைத் தங்களில் வேறு பட்டவர்கள் எனக் கருதவேண்டியதாகி விட்டது. இவ் விபரீத மனுேபாவம் இருசாராருக்கும் ஆபத்தை விளைப்பதாகும். இதை நன்கு சுட்டிக் காட்டி யிருக்கிறுர் டாக்டர். மூஞ்சே. "மதமாற்றத்தால் ஜாதி மாறியதாகக் கொள்ள முடியாது. இந்தியாவில் பிறந்து இந்தியாவில் வசித்தாலும், பெரும்பான்மை சமூகத்தைச் சேர்ந்தவர்களா யிருப்பினும், மத மாறியதால் தாங்கள் தனிஜாதியெனச் சிலர் நினைப்பின், தங்கள் தாய் நாட்டின்மீது விசுவாசம் கொள்ளத் தயாராயில்லாத அம்மக்கள் இஷ்டப்பட்ட இடத்துக்குச் சென்று விடுங்கள் எனக் கூறப்படும் அபாயத்திற்கு உள்ளாவார்கள். மேலும் அவர்கள் இந் நாட்டிலேயே அன்னியர்களாக மதிக்கப்படுவார்கள்" என்ற கூற்றை யாரும் மறுக்க முடியாது. காலநிலைக் கேற்பவும், பிற தேச மக்களின் கூட்டுறவு காரணமாகவும் தங்களிடையே ஏற்பட்டுள்ள சிறு மாறுதல்களைப் பிரமாதமாக்கித் தாங்கள் தனியே எங்கிருந்தோ வந்ததாக நினைத்துக்கொண் டிருப்பவர்களை—தேசபக்தி சிறிது மில்லாதவர்களை—நாம் அன்னியர்களென்றே கருதுகிறேம். நம் நாட்டில் பிறந்தும் மேற்குறித்த விபரீத மனுேபாவங் காரணமாக தேசபக்தி சிறிது மில்லாதிருந்து வருவதால், தேச விமோசனத்தைப் பற்றிக் கவலையே இல்லாதிருந்து வருவதால், அவர்களை அன்னியர்கள் என்று கூறுவதில் தவறில்லை என்றே கூற விரும்புகிறேம். பெற்ற தாயைப் பிச்சை யெடுக்க விட்டு விட்டு, கோதானம் பூதானம் பண்ணும் மகன் நிலையிலேயே வகுப்புவாதிகளான முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும் இருக்கிறுர்கள். இக் கூட்டத்தார் தங்கள் தவறை யுணர்ந்து திருந்தும் நாள் வெகு தூரத்திலில்லை என நாம் நம்புகிறேம்.

# சந்தா நேயர்களுக்கு முன் அறிக்கை

நமது "ஆனந்தபோதினி" மாதப் பத்திரிகைக்கு இந்த இதழோடு இருபத்தொன்பதாம் ஆண்டு பூர்த்தி யடைகிறது. ஆகவே, அடுத்த தாரண ஆடி 1-ந்தேதி (16—7—44) 30-வது ஆண்டு பிறக்கப் போகிறது. 'ஆனந்தபோதினி' தன் பருவத்திற்கேற்ற வளர்ச்சி பெற்று கால வர்த்தமானத்துக்கு இயைந்த பற்பல சிறப்பியல்புகளுடன் விளங்கி வருவது வாசக நேயர்கள் அறிந்த தொன்றும். தமிழ் மக்களுக்கு எல்லாத் துறைகளிலும் ஒரு விழிப்பையும் எழுச்சியையும் அறிவையும் உண்டாக்கித் தக்க வழி காட்டுவதே 'ஆனந்தபோதினி'யின் முதற் பெரும் நோக்கமாகும். 30-வது ஆண்டில் இன்னும் குறிப்பிடத் தக்க விசேஷ அம்சங்களுடன் கூடி விளங்கி 'ஆனந்தபோதினி' உங்களுக்குப் பெரு மகிழ்வை யூட்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறோம். தமிழ் மொழி, சமூகம், சமயம் ஆகியவைகளின் மறுமலர்ச்சிக்கான வகையில் பல கட்டுரைகளையும் சிறு கதைகளையும் தமிழ்நாட்டுப் பேரறிஞர்கள் பலர் 'ஆனந்தபோதினி'யில் எழுதி வருவார்களென்று அறிவிக்க விரும்புகிறோம்.

நாம் இறைவன் திருவருள் ஒன்றையே நம்பி, தமிழ் மக்களுக்கு நம்மாலான சேவையைச் செய்ய வேண்டுமென்ற ஒரு பெரும் நோக்குடனேயே, குறைந்த சந்தா விகிதம் ஏற்படுத்தி நிறைந்த விஷயங்களைக் கொடுத்து ஒழுங்காக இந்த இருபத்தெட்டு வருஷ காலமாக நடத்தி வருகிறோம். ஆனால், இப்போது நடைபெற்று வரும் மகாயுத்தங் காரணமாக, பத்திரிகைக் காகிதங்கள் சவரன் விலையைப்போல் அக விலையாய் விட்டிருக்கிறது. அத்துடன், காகிதத்துக்குப் பஞ்சமும் ஏற்பட்டிருக்கிறது. இதன் பயனாக, பத்திரிகை உலகுக்கு மிகவும் கஷ்ட நஷ்ட மேற்பட்டிருக்கிறது. அத்துடன், சர்க்காரும் இன்ன அளவுள்ள பத்திரிகை இத்தனை பக்கங்கள் கொண்டது இவ்வளவு விலைக்கு விற்க வேண்டுமென்று ஒரு புது உத்திரவு மூலம் நிர்ணயித் திருக்கின்றனர். இன்னோரன்ன காரணங்களால், "ஆனந்தபோதினி" சந்தாத் தொகையை சென்ற ஆண்டிலிருந்து இரண்டு-ரூபாயாக உயர்த்தி யிருக்கிறோம். ஆதலால், "ஆனந்தபோதினி"யின் பால் அன்புபூண்டு ஆதரித்து வரும் வாசக நேயர்கள் அனைவரும் 30-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளது தாரண வருஷம் ஆனிமீ 28-ந்தேதி (11—7—44)-க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுகிறோம். சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. அனுப்புவதால் தபால் செலவு 4 அணா மணியார்டர் கமிஷன் இரண்டணா ஆக ஆறு அணா அதிகமான செலவும் சஞ்சிகை வந்து சேர வீண்கால தாமதமும் ஆகும். ஆகையால் எல்லா நேயர்களும் மேற் குறிப்பிட்ட

# சிலப்பதிகாரமும் ஊழ்வினையும்

(வித்வான்-வெ. சு. சுப்பிரமணியாச்சாரியார் P. O. L.)



கலிங்க மண்டிலத்தே சிங்கபுரத்திரன் கண்ணிருந்த வசு என்பவனும், கபிலபுரத்தின் கண்ணிருந்த குமரன் என்பவனும், தாய வேந்தர்கள். இவர்க ளிருவருக்கும் பகைமை மூண்டது. அதனல் சிங்கபுரத்திலிருந்து கபில புரத்துக்கும், கபிலபுரத்திலிருந்து சிங்கபுரத்துக்கும் யாரும் வருதல் கூடாது.

இப்படி யிருக்க, கபிலபுரத்திலிருந்த சங்கமன் என்பான் தன் மனைவியுடன் மாறுவேடம் பூண்டு பல அணிகலன்களை யெடுத்துக்கொண்டு, சிங்கபுரம் சென்று அவ்வூர்க் கடைவீதியில் அணிகலன்களை விலை பேசிக் கொண்டிருந்தான். இச் சங்கமனுக்குப் பகைவனுகிய பரதன் என்பவன் அவனைப் பகைவனுடைய ஒற்றன் என்று சிங்கபுர அரசனிடம் கூறினுன். அரசனும் இவனைக் கொன்றனன். கொலை யுண்ணப்பட்ட சங்கமன் மனைவியாகிய நீலி என்பாள், "அரசர்காள்! இது முறையோ! இது முறையோ!" என்று புலம்பி மன்றத்திலும், வீதியிலும் சென்று முறையிட்டுப் பதினுன்கு நாள் சென்ற பின்னர் ஒரு மலையின் மீது ஏறி நின்று, 'எனக்கு இத் துயரம் செய்வித்தோர் மறுபிறப்பில் தாங்களும் இத்தகைய துன்பத்தை அனுபவிப்பார்களாக' என்று கூறிக் கீழே குதித்து உயிரை மாய்த்துக்கொண்டாள். காட்டிக் கொடுத்த அப் பரதனே அச் சாபத்தால் கோவலனுகவும், அவனுடைய மனைவியே கண்ணகியாகவும் பிறந்தார்களென்று மதுராபதியின் தெய்வம் கூறியவாற்றுல், கோவலனுக்கும் கண்ணகிக்கும் தாங்கள் பழம் பிறவிகளிலே செய்த வினையால் இங்ஙனம் துன்பம் அடைந்தார்கள் என்று ஊழ்வினை கற்பிக்கப் பெற்றிருக்கின்றது (கட்டுரை காதை 140-170) பாண்

---

தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவதுதான் அவர்கட்கும் நமக்கும் லாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி. அனுப்புவதால் இன்னெரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்குமேல் இருக்கவேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணு வீதம் ஸ்டாம்பு வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அதுவும் 10 நாட்களுக்குமேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். இந்தச் சங்கடங்களை யெல்லாம் நோக்கும்போது அன்பர்கள் எல்லாரும் சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பி ஆதரிப்பதே நலம்

குறிப்பு:—முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா நம்பரைக் குறிப்பிட்டு "30-வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுத வேண்டும், புதிய சந்தாதாரர்கள் 'புதிய ஆண்டிற்கு' என்ற விவரம் எழுத வேண்டும்.

மானேஜர்.

டியனும் அவன் மனைவியும் இறந்தமைக்கு ஊழ் ஒன்றும் வெளிப்படையாகக் கூறப்படவில்லை.

கோவலன் கண்ணகி இவர்களுடைய ஊழைக் கூறிய தெய்வம் மேற்கூறியதற்கேற்பச் சங்கமனே பொற்கொல்லனாகப் பிறந்து கோவலனைக் காட்டிக் கொடுத்தான் என்றும் ஆராயாது சங்கமனைக் கொன்ற வசு என்ற சிங்புரத்து அரசனே பாண்டியனாகப் பிறந்து கோவலனை ஆராயாது கொன்றான் என்றும் கூறி யிருக்குமாயின் கதைப் போக்குக்குப் பொருத்தமாக விருக்கும். பொற்கொல்லனுக்கு ஊழ் ஒன்றும் கூறவேயில்லை. ஜைனர்களுடைய நூலாகச் சிலப்பதிகாரம் இருக்குமானால் ஒருவனை ஒருவன் காட்டிக் கொடுப்பதும் பண்டைய ஊழின் வழியே யாகும் என்று கூறும் என்பதற்கு ஜைன நூலாகிய மேருமந்திர புராணத்தில் எண்ணிறந்த கதைகளிருக்கின்றன.

சோழநாட்டின் கண் பராசரன் என்ற பார்ப்பனன் சேரனுடைய கொடைத்திறனைக் கேட்டு அங்குச் சென்று பல்யானைச் செல்கெழு குட்டுவன் மரபினனாகிய மாந்தர சேரன் என்பவனைக் கண்டு தன்னுடைய கல்வித் திறமையால் அங்குள்ள பார்ப்பனர்களை வென்று பார்ப்பன வாகை சூடிப் பெரும் பரிசில்களுடன் திரும்பி வருகையில் மதுரைக்கு அணித்தாகவுள்ள திருத்தங்கால் என்ற ஊருக்கு வந்து அங்கு ஒரு மரத்தடியில் இளைப்பாறி "பூந்தண் பொருநைப் பொறையன் வாழி; மாந்தரஞ் சேரன் மன்னவன் வாழ்க" (கட்டுரை காதை 83-84) என்று சேரனை வாழ்த்திக் கொண்டிருந்தான். அது போது அவ்வூர் பார்ப்பனச் சிறுவர் சிலர் அங்கு வந்தார்கள். அவர்களைக் கண்ட பராசரன், "பிள்ளைகளே! உங்களுக்கு வேதம் வருமோ? வருமாயின் ஓதுங்கள்; உங்களுள் யார் நன்றாக ஓதுகின்றார்களோ அவர்கள் என்னிடமுள்ள பொருள்களைப் பரிசில்களாகப் பெறுவார்கள்" என்றான். அனைவரும் ஓதினார்கள்; அவர்களுள் வார்த்திகன் மகனாகிய தக்ஷிணாமூர்த்தி என்பவன் மிக நன்றாக ஓதியதைக் கண்டு வியந்து ஆபரணங்கள் பலவற்றையும் அவனுக்குப் பரிசிலாக அளித்தான்.

பரிசில் பெற்ற பார்ப்பனச் சிறுவன் அணிகலன்களோடு ஊருக்குச் சென்றான். பெற்றோர் கண்டு கேட்டு மகிழ்ந்தார்கள். இவ் வணிகலன்களைக் கண்ட அரசன் காவலர்கள், இவன் அரசனுக்குச் சொந்தமான புதை பொருளைக் களவாடியுள்ளான் என்று சிறுவனுடைய தந்தையாகிய வார்த்திகன் என்பவனைச் சிறை செய்தனர். அது கண்ட அவனுடைய மனைவி கார்த்திகை என்பவள் மனம் வருந்திக் கீழ் விழுந்து புரண்டு அழுதனள். உடனே அவ்வூர் ஐயை கோட்டம் கதவடைபட்டது. திறக்க முடியவில்லை. அது கண்ட அரசன் நடுங்கி யானியற்றிய "கொடுங்கோ லுண்டு கொல்" (கட்டு 110) என்று மந்திரிமார்களை வினவினான். மந்திரிமார் நடந்தவற்றை அறிந்து கூற, அரசன், 'அறிவில்லாத காவலால் சேர்ந்த இத்தீமையால் என்னுடைய அரசநீதி பிழைத்தது (கட்டு 116-17.) பொறுத்தருளல் வேண்டு' மென்று வார்த்திகனுக்கு ஊர்களைத் தானமாகக் கொடுத்து அவனை வணங்கி அனுப்பினான். ஐயை கோட்டம் கதவம் திறந்தது. இன்னும் இராஜநீதி பிழைத்ததால், 'ஆடிமாதத்துக் கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமி கார்த்திகையும் கூடிய சுக்கிரவாரத் தன்று இம் மதுரைக்கும், அரசனுக்கும் கேடு வரும் என்ற ஒரு சோதிட வார்த்தை யுண்டு' என்று மதுரைக்கும், அரசனுக்கும் கற்பிக்கப்பட்டிருக்கிறது. பரதனும் மனைவியும் கோவலனும் கண்ணகியுமாகப் பிறந்து மறுபிறப்பில் ஊழ்வினையை அனுபவித்தார்கள். அரசன் அந்தப் பிறவியிலே பிறந்தான்: என்றது எங்ஙனம் பொருந்தும்?

"அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவது"

என்றவாறு, கோவலனைக் கொல்வித்த அரசனை அறக்கடவுள் அந்தச் சன் மத்திலேயே கொன்றது, வேறு பிறவேண்டாதாயிற்று என்று ஒரு சமா தானம் கூறுவார்கள். என்றால், அரசன் இறந்தமைக்கும் மதுரை எரியுண் டமைக்கும் காரணம் வார்த்திகனைச் சிறை செய்ததனால் உண்டான சோதிட வார்த்தையா? கோவலன் கொலையா? என்ற கேள்விக்கு விடை யாதோ?

கோவலன் கண்ணகி ஊழ் இப்படி யிருக்க, இனி இவர்களோடு சம் பந்தமுடைய மாதவி, அவளுடைய மகள் மணிமேகலை ஆகிய இவர்கள் எவ் வகை யூழால் கோவலனுக்குப் பரத்தையராகவும் மகளாகவும் பிறந்தார்கள் என்று ஆராய்வோம். இவர்களுடைய முற்பிறப்பு சிலப்பதிகாரத்தில் கூறப் பெறவே யில்லை "ஊழ்வினை உறுத்து வந்தூட்டு மென்பதாகிய செய்தி" சிலப்பதிகாரத்தே வற்புறுத்தப் பெற்றிருக்கின்ற தென்பதற்குச் சான்றாகக் கோவலன் கண்ணகி இவர்களுடைய ஊழ்வினைதான் கூறப் பெற்றிருக் கின்றதே தவிர, மற்றையோர்களுடைய ஊழ் கூறப் பெறவேயில்லை.

புகார் காண்டத்தேயுள்ள பத்துக்காதைகளுள் ஏறக்குறைய நான்கு காதைகளில் கூறப் பெறுகின்றவளாகிய மாதவியின் முன்னூழ் கூறப் படவே இல்லை. ஆனால், கடலாடு காதையில் "முன்னம் இந்திர சபையில் ஊர்வசி என்ற அப்சரசு சயந்தன் மீது காதல் கொண்டமையால் தோரிய மடந்தையர்களுடைய பின் பாட்டிற்கும் நாரத முனிவருடைய வீணைக்கும் ஏற்றவாறு நன்கு நடிக்காமையால் சாபம் பெற்று இவ் வுலகில் கணிகையர் குலத்தில் மாதவி என்ற பெயரோடு (காஞ்சியம் பதியில்) பிறந்தாள். அந்த மாதவி வழியில் வந்தவள் இந்த மாதவி என்று (வரி 18-24) கூறப் பெற்றிருக்கின்றதே யொழிய வேறில்லை. ஆனால், சிலப்பதிகாரத் தோடு சமமாக வைத்து எண்ணப்படுவது மணிமேகலை என்ற நூலாகும். இம் மணிமேகலை மதுரை கூலவாணிகன் சாத்தனரால் செய்யப்பட்டது. மேலும், மணிமேகலை சிலப்பதிகாரம் செய்யப்படுவதற்கு முன்னமே செய் யப்பட்டதாகச் சிலப்பதிகாரத்தின் இறுதியிலேயுள்ள "நூற் கட்டுரையின் "மணிமேகலை என்னும் தொடர்நிலைச் செய்யுளோடு கூடி உரைக்கப் படும். பொருள் முடிந்த சிலப்பதிகாரம் முற்றுதலுற்றது என்று பொருள் படும்." "மணிமேகலை மேலுரைப்பொருள் முற்றிய சிலப்பதிகாரம் முற் றும்" என்ற தொடர்களால் விளங்குகின்றது. மேலும் உரையில் "அடிகள் அருள மதுரைக் கூலவாணிகன் சாத்தன் கேட்டனன் (சிலப்-பதிகம் 88-89) என்ற தொடரால் சிலப்பதிகாரம் இளங்கோவடிகள் சொல்லச் சாத்தனர் கேட்டருளினர் என்றும் "இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப வளங் கெழு கூலவாணிகன் சாத்தன் மாவண் டமிழ்த்திற மணிமேகலைத் துற வாறைம் பாட்டினு ளறிய வைத்தான்" என்ற மணிமேகலைப் பதிக இறு தித் தொடரால் இளங்கோவடிகள் கேட்க மணிமேகலைக் கதையை மதுரைக் கூல வாணிகன் சாத்தனர் கூறினர் என்றும் காணப்படு கின்றமையால் இந்த இரண்டு நூல்களும், இரட்டைக் காவியங்கள் என்றும் சம காலத்திய இலக்கியங்கள் என்றும் மணிமேகலை முற்பட்டது சிலப்பதி காரம் பிற்பட்டது என்றும் பெறப்படுகின்றன. இம் மணிமேகலை நூலில் மாதவியின் வரலாறு பின் வருமாறு கூறப் பெற்றிருக்கிறது. அசோதர நக ரத்தரசனாகிய இரவிவன்மன் என்ற அரசனுக்கும் அவன் மனைவி அமுதபதி என்பவளுக்கும் மூன்று பெண்கள் பிறந்தனர். அவர்கள் பெயர் இலக்குமி, தாரை, வீரை, என்பன. அவர்களுள் தாரையும், வீரையும் கச்சை நகரத்தர சனாகிய துச்சயன் என்ற அரசனை மணந்தனர். துச்சயன் தன் மனைவி மக்

களை அழைத்துக் கொண்டு வெளி சென்று மலைவளங் கண்டு வந்து கங்கைக் கரையை யடைந்திருந்தான். அப்போது பாதபங்கய மலையைத் தரிசித்தற்குப் போகும் வழியில் அறவணவடிகள் அங்கு வந்தார். வந்த அடிகளை அரசன் வணங்கி வரலாறு வினவினன். அடிகள் தாம் பாதபங்கய மலையைத் தரிசிக்கப் போவதாகவும் அரசனையும் உடன் வந்து தரிசிக்குமாறும் கூறினர். அதன்படியே அரசன் தன் மனைவியாருடனே அடிகளோடு அம் மலையை அடைந்து புத்த தேவனுடைய பாத பங்கயங்களை வணங்கி மீண் டான். மற்றுமோர் முறை அறவணவடிகள் பாதபங்கய மலையைத் தரிசித்து மீண்டு வருங்கயில் மேலே குறிக்கப்பட்ட துச்சயனைச் சோலை ஒன்றிற் கண்டு, "அரசே! நீயும் உன் மனைவியாரும் சுகமோ?" என்றார். கேட்ட அரசன் மனங்கவன்று, "அடிகாள்! வீரை மதுவின் மயக்கத்தால் ஒரு யானை முன் செல்ல அது அவளைக் கொன்றது. அது கேட்ட தாரை மனம் பொருது மாடத்தின் மீது ஏறி விழுந்து இறந்தாள் என்று கூறி அழுதான். அது கேட்ட அறவணவடிகள் "இது பழவினைப் பயனாகும்" என்று கூறித் தேற்றிப் போயினர். அவர்களுள் தாரை மாதவியாகவும் வீரை சுதமதியாகவும் தோன்றியுள்ளார்கள் என்று மணிமேகலை 7வது துயிலெழுப்பியகாதை, 9வது பிடிகை கண்டு பிறப்புணர்ந்த கதைகளா லும் 10வது மந்திரங் கொடுத்த காதையாலும் 12வது அறவண வடிகளைத் தொழுத காதையாலும் அறியப்படும் பழவினை வரலாறாகும்.

நிற்க, இந்தத் தாரை, வீரை ஆகிய இவர்களுடைய உடன் பிறந்தாளா கிய இலக்குமி என்பவள் அத்திபதி என்ற அரசனுக்கும் நீலபதி என்ற வளுக்கும் மகனாகப் பிறந்த இராகுலன் என்பவனுக்கு மனைவியாயினள். அவனே திட்டிவிடம் என்ற பாம்பால் கடியுண்டு இறந்தான். அவனுடன் தீப்புகுந்து இலக்குமியும் இறந்தாள். அவளே காவிரிப்பூம்பட்டினத்தில் தன் தமக்கையாகிய (தாரை) மாதவியினுடைய வயிற்றில் பிறந்தவள் என் றும், வீரையே சுமதியாகப் பிறந்தாள் என்றும் மணிமேகலையே கூறு கின்றது.

அரச குலத்தில் பிறந்து அரசனை மணந்து தங்கையாகிய வீரை என்ப வள், யானையால் கொல்லப்பட்டு இறந்த செய்தி கேட்டுப் பெரிதும் வருந்தித் தங்கையாகிய வீரை இறந்த பிறகு தான் உயிர்வாழ மனமில்லாமல் தன்னு டைய கணவனையும் விட்டு, மாடத்தின் மீது ஏறி விழுந்து உயிர் துறந்த தாரை என்பவள் ஒரு பரத்தையாகப் பிறப்பானேன்? நிற்க, ஒருவனும் ஒருத்தியும் கூடுவது ஊழ்வலிமையா லாகும். அதாவது முன் பிறப்பின் கடந்த ஒன்றின் தொடர்பால் நிகழுகிறது என்பது யாவருக்கும் ஒப்ப முடிந்த ஒன்றாகும். வடகடலிட்ட நுகத் தொளையில் தென் கடலிட்ட கோல் நுழைந்தால் போலும் நீர் சாய்ந்தவழி கோரை சாய்ந்தால் போலும் ஊழ் வழிப்பட்டு ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்றார்கள் என்று இலக்கண நூலா ரும் கூறுவது இச் செய்தியை வலியுறுத்தும்.

மேலும், சுதமதியோடு மலர்வனம் சென்ற மணிமேகலை உதய குமாரனைக் கண்ட காலை அவளுடைய மனம் உதயகுமாரனிடம் சென்றதற் குரிய காரணம் உதயகுமாரன் முன் பிறப்பில் இராகுலனவான். முற் பிறவி வாசனையே உன் மனத்தைத் தூண்டியது என்று மணிமேகலா தெய்வம் 10வது மந்திரங் கொடுத்த காதை 43-45வரிகளாலும் காயசண் டிகையின் வேடத்திருந்தவள் மணிமேகலை யென்று அறியாது அவளுடைய கணவனான காஞ்சனன் என்பவன் உதயகுமாரன் காயசண்டிகையின் வடிவத்தினிடம் வரவே தன் மனைவியின்பால் காதல் கொண்டு இங்ஙனம் வருகின்றான் என்று கருதி, உதயகுமாரனைக் காஞ்சனன் தன் வாளால்

வெட்டினன். வெட்டுண்டு கீழே விழுந்த உதயகுமாரனை மணிமேகலை கண்டாள். காயசண்டிகை வடிவத்தை மாற்றித் தன் உண்மை வடிவைக் கொண்டாள். முன் பிறப்பின் தொடர்பைக் கூறிப் புலம்பினள். புலம்பிக்கொண்டே விழுந்து கிடக்கும் அவனருகிற் செல்வாளாயினள். அப்போது அங்கிருந்த கந்திற் பாவைத்தெய்வம் மணிமேகலையை நோக்கி, 'நீ அவனிடம் செல்லாதே! உனக்கு இவன் கணவனா யிருந்ததும் இவனுக்கு நீ மனைவியா யிருந்ததும் சென்ற பிறவியிலே மட்டும் நிகழ்ந்ததல்ல. அதற்கு முன்னும் எத்தனையோ பிறவிகளிலும் கணவனும் மனைவியுமாக விருந்தீர்கள்; (21வது கந்திற் பாவை வருவதுரைத்த காதை 29-32) என்று கூறியதனாலும் ஒருவனும் ஒருத்தியும் கூடுவதற்கு ஊழ்வினை வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகின்றது. எனவே, அரசவம்சத்தைச் சேர்ந்த தாரை இறந்து பரத்தையாக அதாவது நாடகமகளாகப் பிறந்தவள் கோவலனை மணப்பானேன்? இவர்களிருவரும் காதலிப்பதற்கு உரிய பழ வினை யாது?

இதுகாறும் கூறியவாற்றால் கோவலன் முற் பிறப்பில் பரதன் என்பவனாக இருந்தான் என்றும் இவனால் கொல்லுவிக்கப் பெற்ற சங்கமனுடைய மனைவியாகிய நீலியிட்ட சாபத்தால் கோவலனாய்ப் பிறந்தான் என்றும் சிலப்பதிகார மதுரைக்காண்டக் கட்டுரை காதை 138-165வரிகள் கூறுகின்றன. துச்சயன் மனைவியாகிய தாரையே மாதவியாகப் பிறந்தாள் என்றும் ஏற்படுகிறது. முன் பிறப்பில் ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லாத இவர்களிருவரும் இப் பிறப்பில் கூடியதற்கு உரிய ஊழைக் கூறுமலே விடப்பட்டுள்ளது. எனவே, இந்நூல் "ஊழ்வினை உறுத்து வந்தூட்டும்" என்று கூறுவது பொருந்துமா றெங்ஙனம்?

மணிமேகலையின் முற் பிறப்பில் அதாவது இலக்குமி என்ற பெயரோடு இருந்த காலத்துக் கணவனாகிய இராகுலன் என்பவன் திட்டிவிடம் என்ற பாம்பாலும் உதயகுமாரனாக வந்தபோது காஞ்சனன் என்ற விஞ்சையனாலும் கொல்லப்பட்டதற்குப் பின் வருமாறு ஊழ்வினை கூறப்பெற்றிருக்கிறது.

இலக்குமியும் (மணிமேகலை) இராகுலனும் (உதயகுமாரன்) காயங்கரை என்னும் ஆற்றங்கரையில் தருமோபதேசம் செய்துகொண்டிருந்த பிரமதரும முனிவரைக் கண்டு வழிபாடுசெய்து அவரைத் திருவமுது செய்விக்க வேண்டித் தன்னுடைய சமையற்காரனுக்குக் கட்டளை இட்டனர்: அந்தச் சமையற்காரன் யாதோ காரணத்தால் சிறிது காலம் தாழ்த்தி வந்தான். அங்ஙனம் வந்தவன் அச்சத்தால் கால் வழுக்கிக் கீழே வீழ்ந்தான். அவன் கொண்டுவந்த சமையல், பாத்திரத்தோடு கீழே விழுந்து கெட்டது. வீழ்ந்தவனைக் கண்டு இரங்காமல் "இவன் முனிவருக்குச் செய்யவேண்டிய தொண்டினை விரைந்துவந்து செய்யாமல் தாமதித்தானே" என்று இராகுலன் கோபித்துச் சமையற்காரனை வாளால் வெட்டினன். வெட்டிய அவ் வல்வினையே அப் பிறப்பில் திட்டி விடத்தால் இறக்கச் செய்ததன்றி, இப் பிறப்பிலும் வெட்டுண்டு விழச் செய்தது என்று கந்திற்பாவை வருவதுரைத்த காதை 47—62 வரிகளாலும், மணிமேகலை உதயகுமாரன் தாயாகிய விசயமா தேவிக்குக் கூறியதாகச் சிறைவிடு காதை 82—86 வரிகளாலும் அறியப்படுகின்றது.

அவர்களிடம் சென்று தனது நிலைமையைக் கல்லும் கரையுமாறு சொன்னான். உடனே அப் பெண்கள் தங்களால் இயன்ற தானியத்தையும் மாவையும் கொடுத்து அதிக நேரமாய் விட்டபடியால் உடனே புறப்படுமாறு சொல்லிக் கண்ணீர் சிந்தி நின்றனர்.

சென்று வழக்குரைத்துத் தன் கணவன் கள்வன் அல்லன் என்று நிரூபித்தலும், அரசனும் அவன் மனைவியும் இறக்க, வெளியே வந்து மதுரை எரியுண்ணட்டும் என்று சபித்தாள். மதுரை தீப்பற்றி எரிய ஆரம்பித்தது. அதுபோது மதுரைமா தெய்வம் கண்ணகியின் முன்னே வர அஞ்சிப் பின்புறம் தோன்றிக் கோவலன் கண்ணகி பண்டைய (முன்பிறப்பு) வரலாறு கூறியதாகச் சிலப்பதிகார அழற்படுகாதை கூறுகின்றது. அங்ஙனம் கூறும்போது அன்றிரவு மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் மதுரையிலுள்ள வெள்ளியம்பலத்தே துயின்றிருந்ததாகவும் மதுரைமா தெய்வம் கோவலன் கண்ணகியினுடைய பழவினைச் செய்தி கூறும்போது தான் விழித்துக் கேட்டிருந்ததாகவும் பதிகத்து 39-42 வரிகளால் சாத்தனாரே இளங்கோவடிகளுக்குக் கூறியதாகவும் கூறியிருக்கின்றது. ஆதலால் கோவலன் பழம் பிறப்பு தெரிந்து கூறினார்; மற்றவர்களுடைய பழம் பிறப்பு மதுரை தெய்வம் கூறவில்லை; அதனால் இளங்கோவடிகள் கூறவில்லை என்பார்கள். என்றாலும் மணிமேகலையில் கூறியிருக்கும் பழம் பிறப்புக்கள் அத்தனையும் சாத்தனார் கூறியவைகளே யொழிய வேறில்லை.

கோவலனுடைய பழம் பிறப்பு தெய்வம் கூறினமையால் சாத்தனார் அறிந்தார். மற்றவர்களுடைய பழம் பிறப்பெல்லாம் எப்படித் தெரிந்து இவர் கூறினார்? மணிமேகலைதான் தன்னுடைய பழம் பிறப்பையும் ஏனையோருடைய பழம் பிறப்பையும் புத்தபீடிகையைத் தரிசித்தமையாலும் மணிமேகலா தெய்வத்தாலும், அறவணவடிகளாலும் கந்திற்பாவையாலும் தெரிந்துகொண்டாள். இவள் தெரிந்திருந்த வரலாறுகள் எல்லாம் சாத்தனார் எவ்வாறு அறிந்தார்? மணிமேகலை கூறினளோ எனின், சாத்தனார் மணிமேகலையைக் கண்டு தெரிந்து கொண்டதாக எங்கும் கூறவேயில்லை. அல்லது கோவலன் பழம் பிறப்பை மதுராபதி தெய்வம் கூறியது போன்று மற்றவர்களுடைய பழம் பிறவிகளைப் புகார் தெய்வம் கூறியதோ என்றால் அங்ஙனம் கூறியதாகவும் நூற்களால் அறியக்கூட வில்லை. ஆதலால், இப் பழம் பிறப்புக்கள் எல்லாம் சாத்தனார் மனத்திலிருந்து தோன்றியவைகளே என்பதில் என்ன ஐயப்பாடு உளது?

மேலும் முன்னர்க் கூறியபடி சிலப்பதிகாரத்துக்கு முன்னதாகவே மணிமேகலை நூல் செய்யப்பட்டது என்ற கொள்கையின்படி நோக்கினால், கோவலனுடைய சாப வரலாறு முதல் முதலாக மணிமேகலையில் 26வது வஞ்சிமாநகரம் புக்ககாதையில் 5-35 வரிகளால் சாத்தனார் கூறியிருக்கின்றார்.

ஒரு சிலர் கோவலன் முன் பிறப்பு கூறவேண்டிய அவசிய மிருந்தது. அவன் கதைக்கு இன்றியமையாதவன். அவனில்லையானால் சிலப்பதிகாரக் கதையேயில்லை என்கிறார்கள். சிலப்பதிகாரக் கதைக்கு மாதவி மிக முக்கியமானவள்-மிக இன்றியமையாதவள். அவள் இல்லை என்றால் கோவலன் கண்ணகியைவிட்டுப் பிரிவதேது? அவன் பொருள்களுக்கு அழிவேது? மாதவியோடு கூடியன்றோ பொருளை எல்லாம் இழந்தான். இழந்தவை போக எஞ்சியிருந்த பொருள் கண்ணகியின் காற்சிலம்பே. சீரும் சிறப்புடன் வாழ்ந்த ஊரில் கெட்டு இருத்தல் கூடாது என்று முடிவு செய்து கொண்டு கண்ணகியோடு மதுரையடைந்து அங்குக் கொலையுண்டான். எனவே, மாதவி இல்லையானால் சிலப்பதிகாரக் கதை நிகழ்ச்சிக்கு இடமே இல்லை. அப்படிப்பட்டவளுடைய ஊழ் கூறவேண்டுவது அவசியமல்ல என்று கூறுவது பொருந்துமா? இவள் மிகவும் முக்கியமானவள் என்பது "மாதவி மடந்தை கானற் பாணி கனகவிஜயர் முடித்தலை நெரித்தது," என்று 27வது நீர்ப்படைக் காதை 49-51 வரிகள் வற்புறுத்துகின்றன.

கண்ணகியின் பிரதிட்டையைக் காண அரட்டன் செட்டி என்பவனுடைய இரட்டைப் பெண்களாகிய இருவரும் சேடக்குடிம்பியின் மகளும் வந்திருந்தனர். அது போது கண்ணகியின் தோழியாக விருந்த தேவந்தி என்ற பார்ப்பனப் பெண் ஒருத்தியும் வந்திருந்தாள். அவள் மீது பாசாண்ட சாத்தன் என்ற ஒரு தெய்வம் ஆவேசித்து அங்கிருந்த மாடலன் என்ற ஒருவனைப் பார்த்து, "மாடலா! மங்கலாதேவி என்ற தெய்வத்தின் கோயிலுக்கு நீ சென்று அத் தேவியை வணங்கி விட்டு அவளுடைய கோபுரவாயிலில் நின்றுகொண் டிருந்தாயல்லவா? அருச்சகன் ஒருவன் வந்து அக் கோயிலிலிருக்கும் சுனைநீரை உடைய ஒரு கரகத்தை நின்னிடம் கொடுத்துச் சென்றானல்லவா? அந்த நீரை இங்கு வந்திருக்கும் மூன்று பெண்களின் மீதும் தெளிப்பாயானால் அவர்களுக்கு முற்பிறப்பின் உணர்ச்சிவரும்'' என்று கூறிற்று. அம்மாடல மறையோனும் அவ்வண்ணமே நீரைத் தெளித்தான். உடனே அப்பெண்கள் மூவரும் தங்கள் பழம் பிறப்புணர்ச்சி பெற்று மழலைச் சொற்க ளொழிந்து முதியவர்கள் போலப் பேசி அழுதார்கள். இவர்களே கண்ணகியின் நற்றாய், கோவலன் நற்றாய், மாதரி என்ற மூவரும் ஆவார்கள். கதைக்கு அத்துணை வேண்டற்பாலன வல்லாத செய்திகள் வந்திருக்க, கதைக்கு மிக இன்றியமையாத மாதவியினுடைய ஊழ்வினை கூறாமைக்கும், அல்லது மாதவி தன்னுடைய வாழ்க்கைக்கு இடையூறாக வர அதாவது வாழ்வினைப் பிடுங்கிக்கொள்ள கண்ணகி செய்த ஊழ்வினை கூறாமைக்கும் காரணம். இளங்கோவடிகள் மனோபாவத்தில் தோன்றிய கதையாகையால் அவர் தம்மிஷ்டம்போல் கூறியுள்ளார் என்பது புலனாகாமல் போகாது.

நிற்க, மதுரை எரியுண்டமைக்கும் அரசன் இறந்தமைக்கும் கூறியிருக்கும் காரணத்தை முன்னரே கூறியுள்ளேன். வார்த்திகன் என்ற அந்தணனை அரசனுடைய ஊழியர்கள் அரசனுக்குத் தெரியாமலே சிறைபிட்டனர். அந்தணனுடைய மனைவி கார்த்திகை என்பாள் அழுதாள், புரண்டாள், ஏங்கினாள், பொங்கினாள் (கட்டுரை காதை 104-108). அதுகண்ட ஐயை கோயில் கதவடைந்தது. அது தெரிந்த பாண்டியன் மயங்கி மந்திரிகளை நோக்கி "யானியற்றிய கொடுங்கோன்மை ஏதேனும் உண்டோ?" என்று வினவினான். வார்த்திகன் சிறை செய்யப்பட்ட செய்தி அறிவிக்கப்பட்டது. உடனே அரசன் வார்த்திகனைச் சிறையின்றும் கொணர்ந்து "அறியாத மாக்களால் முறைநிலை திரிந்து என் செங்கோல் முறை பிழைத்தது." பொறுத்தருளுவது தேவரீர் கடனாகும்" என்று வேண்டிச் சில ஊர்களைக் கொடுத்து அனுப்பினான். ஐயை கோட்டக் கதவம் பலரும் அறிய பெருஞ் சத்தத்தோடு தானே திறந்து கொண்டது. இதில் அரசன் பிழை ஏதேனும் உண்டோ? ஊர்செய்த பிழையுமுண்டோ? ஒன்று இல்லைஎன்று கூறுதல் பிழையாகாது. அங்ஙனம் பிழை செய்திருந்தாலும் அப்பிழை மன்னிக்கப் பட்டது என்பதற்கு அடையாளமாகத் தாமாகவே மூடிக் கொண்ட கோயிற்கதவம் தாமாகவே திறந்துகொண்டது. எனவே, மன்னிக்கப்பட்ட செய்தி வெள்ளிடைமலை. இம் மன்னிக்கப்பட்ட செய்தியை ஒரு குற்றமாக்கி அதற்காக ஊரும் அரசனும் முறையே எரியுண்ணலும் இறத்தலுமாகிய இரண்டும் நிகழ்ந்தன என்று கூறுதல் பொருந்துமா? கற்பித்த இந்தக் காரணமும் பொருந்துமா? பொருந்ாதன்றோ' மேலும், மதுரை எரியுண்டதும் அரசு கேடுற்றதும் சோதிடவார்த்தையால் என்று கொண்டால், கோவலனைக் கொலை செய்வித்ததால் நேர்ந்த சம்பவம் யாது? என்ற கேள்விக்கு விடையில்லை.

எனவே, இன்னோரன்ன முரண்பாடுகள் தோன்ற ஊழ் கற்பிக்கப் பட்டிருத்தலைக் கூர்ந்து நோக்கின், சிலப்பதிகாரம் ஒரு புனைந்துரைக் காதை என்பது புலனாகாமற் போகாது.

# அவன்

(எஸ். சிதம்பரம்)

அன்று நான் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தேன். சாயங்கால சமயம். ஸ்டேஷன் எதிரில் ஒரு 'பார்க்'. நான், அங்கு, ஒரு மாநிழலில் பசும்புல் தரையில், மேல்துண்டை விரித்து உட்கார்ந்தேன். சுகமான காற்று தவழ்ந்து கொண்டிருந்தது.

திடீரென்று என் கவனம் என்னையும் அறியாமல், சற்றுத் தூரத்தில் நின்ற ஒரு சிறு பையன்பால் சென்றது. அவன் ஸ்டேஷனில் கூடும் மனிதர்களிடம் இருந்து பிச்சை வாங்கிப் பிழைக்கும் கூட்டத்தைச் சேர்ந்தவன். வயது ஏழு இருக்கும். வயிற்றுக்குச் சோறு இல்லையானாலும் நல்ல களை பொருந்தி இருந்தது அவன் முகத்தில். ஊடுருவிப் பார்ப்பது போன்ற கண்கள். சுருண்டு தொங்கின—என்ணெய் கண்டு வெகு காலமாகி யிருக்கும்—கேசம். அவன் அங்கே கற்படிகளில் ஒன்றில் இருந்தான். இடுப்பில் வேஷ்டித் துண்டைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. அவன் யாருடைய வரவையோ எதிர்பார்த்து இருக்கிறான் என்பது தெரிந்தது.

கொஞ்சநேரம் கழிந்தது. அவன் எழுந்து வேகமாக முன் நோக்கி நடந்தான். தான் எதிர்பார்த்து நின்ற மெயில் வண்டி வந்ததைக் கண்டு தான் அவன் அவ்விதம் நடந்திருக்கவேண்டும். ஆம்! அந்த ரயில் வண்டியைத்தான் அவன் எதிர்பார்த்திருந்தான். ஆனால் எங்கும் போவதற்காக அல்ல; அதற்கு அவன் அருகதையுள்ளவனா? ரயிலில் இருந்து இறங்கும் மனிதக் கூட்டத்தினிடமிருந்து ஏதாவது பிச்சை கிடைக்காதா என்பது தான் அச் சிறு உள்ளத்தின் சிறு எண்ணம்!

மெயில் வண்டி ஒரு பெருமூச்சுடன் நின்றது. சற்று முன்பு நிதானமாக இருந்த ஸ்டேஷன் இப்பொழுது திமிலோகப்பட்டது. காற்று வாங்க வந்தவர்களில் சிலர் ஸ்டேஷனில், அப்பொழுதுதான் மெயிலில் வந்த பேப்பர்கள் வாங்க எழுந்தனர். கூலிகள், போர்ட்டர்கள் எல்லாரும் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் குறுக்கும் நெடுக்குமாக, "கூலி கூலி, ஐயா, கூலி வேணுமா?" என்று கத்திக்கொண்டே ஓடினார்கள். ரயிலில் இருந்து அநேகம் பிரயாணிகள் இறங்கினர். ஒவ்வொருவரும், நீண்ட பிரயாணத்தின் அலுப்பு முகத்தில் பிரதிபலிக்க, வெளியே வந்தனர்.

இவ்வளவு தடபுடலுக்கும், கோலாகலத்திற்கும் இடையில் அச் சிறு பையன் பம்பரமாகச் சுழன்று கொண்டிருந்தான். "ஐயா, ஒரு காசு போடுங்கோ, ஐயா, இன்னிக்கு பூரா பட்டினிங்க, எசமான்" என்று ஒவ்வொருவரிடமும் தன் குறையைச் சொல்லி, நிவர்த்திக்கும் வழி தேடிக் கொண்டிருந்தான். ஆனால் அவனை ஒருவரும் கவனிக்கவில்லை. எல்லா பிரயாணிகளும் வண்டி பிடிப்பதிலும் சாமான்களைத் தங்கள் தங்கள் வீடு கொண்டு சேர்க்கத் தகுந்த கூலிகள் பிடிப்பதிலும் ஈடுபட்டிருந்தார்கள்; சிலர் அவன் சொல்வதைக் கேட்டு, "சீ, போடா, கழுதை. இந்த அவசரத்திலே பிச்சை! போடான்னா......" என்றும் கூறினார்கள்.

ரயிலில் இருந்து இறங்கிய கூட்டம் குறைந்துகொண்டே வந்தது. பையனுக்கு இன்னும் ஒரு காசுகூட கிடைக்கவில்லை. ஏமாற்றத்தின் குறியும், வேதனையின் ரேகையும் அவனுடைய முகத்தில் படர்ந்து இருந்தது. ஓடி, ஓடி அவன் களைத்து விட்டான். காசு கிடைக்காத வருத்தம், வசவுகளின் கொடுமை, நிர்த்தாக்ஷணியம், அலக்ஷியம் இவைகளை என்றும் அனுபவிக்கிற அவனுக்கு இன்று மாத்திரம் இவைகள் புதிதா?

அலுத்துப்போய் முதலாவதாகத் தான் இருந்த கற்படியில் திரும்பவும் போய் உட்கார்ந்தான். அதே சாயை! அதே தோற்றம்! ஒன்றும் நடவாததுபோலவே இருந்தான்! இது அவனுக்கு வாடிக்கை யானதுதானே?

நான் இவைகளை எல்லாம் கவனித்துக்கொண்டே இருந்தேன். பாவம்! கடைசியில் பையனுக்கு ஒரு காசுகூட கிடைக்கவில்லை என்பதைக் கண்டவுடன் என்னல் பொறுக்க முடியவில்லை. மெதுவாக அவன் இருந்த பக்கம் நோக்கி நடந்தேன். வறுமையின் கொடுமையாலும், பணப்பிசாசுகளின் உதாசீனத்தாலும், நாலா பக்கங்களில் இருந்தும் தாக்குண்ட அச் சிறு பையன் என்னைக் கண்டவுடன் குதித்தெழுந்தான். என்னிடமும் அவனுடைய பல்லவியை ஒப்பித்தான்.

''ஐயா, ஒரு காசு போடுங்க சாமி. இன்னிக்குப் பூரா பட்டினிங்க, எசமான்'' என்று தன் வறுமையை, சோகத்தை, பிழிந்து காட்டினன். அவனைப்பற்றி ஒன்றும் நான் கேட்கவில்லை. ஏதோ பையில் இருந்த சில்லறையைக் கொடுத்தேன். அவன் சிறு இருதயம் சந்தோஷத்தால் பூரிப்படைந்து விட்டதுபோலும். பொங்கிவழியும் நன்றி உணர்ச்சியை அவன் வாழ்த்துக்களால்—மனப்பூர்வமான வாழ்த்துக்களால்—தெரிவித்தான்.

இருட்டிவிட்டதால் வீட்டை நோக்கிச் சென்றேன். அன்று இரவு வெகு நேரம் வரை அவனைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

## 2

மறுநாள் கொஞ்சம் ஜவுளி சாமான் எடுக்க ஜவுளிக்கடைப் பக்கம் சென்றேன். வெகு நேரம் பேரம் பேசியும் நல்ல தினுஸுகளைத் தேர்ந்தெடுத்தும், கடைசியில் ஒரு பெரிய ஜவுளிக்கட்டுடன் வெளியே வந்தேன். கட்டு பெரிதாகையால் ஒரு கூலிக்காரன் தேவையாய் இருந்தது. சுற்றுமுற்றும் யாராவது கூலிகள் நிற்கிறர்களா என்று பார்த்தேன். நான் நின்று கொண்டிருந்த வரிசையின் எதிர்வரிசையில்—அச் சிறு பிச்சைக்காரன் பிச்சை வாங்க முயற்சி செய்துகொண் டிருந்தான்.

நான் அச் சிறு பையனைக் கூர்ந்து கவனிப்பதை அவனும் பார்த்து விட்டான். அவ்வளவுதான். அவன் அவிழ்த்துவிட்ட இளம் கன்றைப்போல் என்னை நோக்கி விரைந்து துள்ளிக் குதித்துக்கொண்டு வந்தான்.

அவன் எதிர்பக்கம் இருந்து என்னை நோக்கி ஓடி வர ஆரம்பித்ததுமே என் மனம் ஏனே துணுக்குற்றது. அவன் ரோட்டில் குறுக்கே பாய்ந்து விட்டான். ஒரு கார் பேய்மாதிரி வருகிறதை அவன் கவனிக்கவில்லை. இன்னும் இரண்டே எட்டில் அவன் ரோட்டைத் தாண்டி யிருப்பான். ஆனல் எதிர்பாராதது நடந்துவிட்டது. ஓடுகிற வேகத்தில் ஒரு கல் தடுக்கி விட்டது. பையன் குப்புற விழுந்தான். ''ஐயோ'' என்று நான் என்னையும் அறியாமல் கத்தி விட்டேன். ''கிரீச்ச் ச்......'' என்று காரின் பிரேக் சப்தம் மறு நிமிஷம் கேட்டது.

கும்பல் கூடி விட்டது. ''கார் பையன்மேல் ஏறி விட்டது'' என்ற பேச்சு எழுந்து விட்டது. கும்பலை விலக்கிக் கொண்டு போய் பார்த்தேன். கோர பரிதாப காட்சி. பையன் குப்புற கிடந்தான். கார் அவனுடைய கழுத்தின் மீது ஏறி விட்டது. ரத்தம் வாயில் இருந்து ஒழுகிக் கொண்டிருந்தது.

எனக்குத் துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டது. பாவம்! நம்முடைய இரக்கமுள்ள இருதயத்திற்கு இது ஒரு ஆறுதலா என்று ஏங்கினேன். ஆனல், நான் ஒருவன் தான் பையனுக்காக இரங்கினேன். மற்றுள்ளவர்கள், ''கார் வர்றது கண் தெரியலையோ. ரோட்டிலே இவன் எல்லாம் ஏன் வர்றான்...'' என்றுதான் சொன்னர்கள். வறுமையை வடிவாக்கி காட்டுவதுபோல் இருக்கும் ஒரு காட்சி—இதைப் பார்த்தும் இரக்கம் என்பது அற்றுப்போய் விட்டதே......!

நான் வீட்டை நோக்கி என் ஜவுளிக் கட்டுடன் நடந்தேன், என் கண்களில் நின்றும் இரண்டு துளிக் கண்ணீர் வழிந்தோடிற்று. அவனுடைய ஆத்மா என் கண்ணீர்களால் மட்டும் சாந்தியடைந்து விடுமா?

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### நூதனக் கோள்களும்—பல பாகமும்

சூர்யனுடைய ஒளிக் கதிர்கள் வானவெளியில் வரை காண வியலாத எல்லை மட்டும் பரவிச் செல்வன. அவற்றின் இறுதி வரை சூர்யனுடைய ஆதிக்கம் இருக்கின்றதென்பதில் ஐயமில்லை. அவ் வெல்லை வரை இடம் பெறும் கோள்கள் ஒவ்வொன்றும் சூர்ய குடும்பத்தைச் சார்ந்தவையே. ஆயினும், அவை அத்தனையும் ஒரு குறிப்பிட்ட ஒன்றுக்கு பலன் தருவதற்குரியனவென்று கூறுவதற்கில்லை. பலன் தருவதற்கு இரண்டு அம்சங்கள் முக்கியமாக இருக்கவேண்டும். ஒன்று-முதலாவதாக இயற்றமற் கோளமான சூர்யனுடைய ஒளி—வெப்பங்களென்னும் அருள். மற்றொன்று-இரண்டாவதாக பலன் தருவதற்குரிய எல்லையுள் அடங்கவேண்டும். அதாவது ஒன்று மற்றொன்றிற்கு நிகழ்த்தும் பலன்கள் எந்த எல்லை வரையுள் பலன் நிகழ்த்தும் கிரகம் இடம் பெற்றிருந்தால், பலன் பெறும் கோளை வந்து அடையுமோ அந்த எல்லை வரையுள் பலன் நிகழ்த்தும் கோள் இடம் பெற்றிருக்க வேண்டும்.

இவ் இரண்டு அம்சங்களில் முன்னது ஒவ்வொரு கோளுக்கும் அவ் அவற்றின் இயற்பலங்களுக்கு முக்கியமானது; பின்னது பலன்கள் சென்றடைவதற்குரிய பலத்தில் நிகழ்த்துவதற்கு இன்றியமையாதது. இவை இரண்டிலும் பொதுவாக பரஸ்பரம் ஒன்றுக்கொன்றுள்ள சம்பந்தம் கூறலாமாயினும், பின்னதில் அது விசேஷங் கொண்டிருக்கிறது. இந்த சம்பந்தம் எவ்வளவிற்கு மிகுந்திருக்கிறதோ அவ்வளவிற்குத்தான் பலன் நிகழ்த்துவதிலும்—அப் பலன்கள் பலன் பெறும் கோளை வந்தடைவதிலும் வலுவுடையதாக விருக்கும். இத்தகைய கோள்கள் தாம் 'பல பாகத்தில்' வரக்கூடியவை. இதற்கு அப்பாலுள்ளவை எவையும் சூர்ய குடும்பத்திற் குட்பட்டவைகளாயினும், பலன் செய்யும் கோள் இனத்தில் வரா.

இவ்விதம் நம்முடைய பூமிக்குப் பலன் செய்யும் கோள்கள் இடம் பெறும் எல்லையை அதன் நிழல் வரையை அடுத்து சற்று அருக்க—அதாவது 'சனிக்கிரக'த்தின் சுற்று வீதி மட்டும் என்று நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கிறது. இதன் அப்பால் இருப்பன எவையும் பலன் நிகழ்த்துவதற்குரிய தொடர்பு கொண்டிருக்க முடியாது; இதனால்தான் 'இந்திய ஜ்யோதிஷ பல பாகம்' சூர்ய அருளிலும் மிகக் குறைந்த—பலன் செய்யும் தொடர்புக்கு வலுவுள்ள எல்லையினின்றும் வெகுதூரம் அப்பாலுள்ள இந்த நூதனக் கிரகங்களைச் சேர்க்கவில்லை யென்று கூறவேண்டும்.

ஆனால், மேலைப்புலவர்கள் இவைகளைப் 'பலபாக'த்திற்கு முக்கியங் கொண்டவைகளாகவே சேர்த்துக் கணிக்கின்றனர்

அவர்கள் இதுவரை கண்டிருக்கும் நூதனக்கோள்கள் மூன்றிலும் 'யுரேனஸ்'—'நெப்டியூன்' இவற்றின் செல்வாக்குகளையும், அவற்றால் ஆகும் பலன்களையும் வெகுவாக விரித்துள்ளனர். இறுதியான 'ப்ளூட்டோ' வைப்பற்றி ஆராய்ந்தவண்ண மிருக்கின்றனர்.

'யுரேனஸ்'—'நெப்டியூன்' இந்தக் கோள்கள் இரண்டிற்கும் அவர்கள் காணும் பலன்கள் 'இந்திய ஜ்யோதிஷ பலபாகம்' சாயை களான 'இராகு—கேது'க்களுக்குக் கூறும் பலன்களாகவே பெரும்பாலும் இருக்கின்றன. இருள் நிலைகளான சாயைகளுக்கு ஒளி நிலைக்கு எதிராக வரும் பலன்கள் கற்பிக்கப் படுகிறது. இதன் மூலத் தத்துவம் இரண்டிலும் ஒன்றாகவே இருப்பதால், அதன்மேல் கூறுவனவும் ஒன்றாகவே இருப்பதில் வியப்பில்லை. ஆனால், மேலைப் புலவர்களுக்கு சாயைகள் ஸ்தூலமான கோளங்க ளாகவில்லை யாதலால், அவற்றின் ஸ்திதிகளைக் கொள்வதில் தயக்கம் ஏற்படுகிறது. எனவே, சாயைகளின் குண அமைப்பு கள் வாய்ந்த ஸ்தூலமான கோள்களுக்கே அப் பலன்களைக் கொள்கின்றனர்.

பூமிக்கு மிக அருகிலுள்ளது ஒளி நிலையான சூர்யன். அது அவ்விதம் அருகிலிருந்தும் பூமியின் இயற்கை அமைப்பில் அதன் எல்லாப் பாகங்களிலும் சூர்யனுடைய ஒளி—வெப்பங்களாக அருள்—அதாவது சூர்யன் நிகழ்த்தும் அல்லது அதன் தொடர் பில் நிகழுகிற பலன்கள் ஒன்றுபோலில்லை. பூமியின் துருவங்களை அடுத்த பிரதேசங்களில் பகல்—இரவுகள் நீண்ட நெடும் பொழு தாக—தேவர்களுடைய தினம் என்னும்படி இருக்கும். இதனால், ஆகும் பலன்களும் இதர பிரதேசங்களுக்கு மாறுகின்றன. இந் நிலையில் பூமிக்கு மிக தூரத்திலுள்ள சாயையின் இயல்களைக் கொண்ட இந்நூதனக் கோள்களின் பலன்கள் பூமிக்கு எவ்வாறு வந்தடையுமென்பது சற்று சிந்திக்கத் தக்கது. பூமிக்கு தூரமாக விருப்பதினும் அதிகமாக சூர்யனுக்கும் மிக தூரத்திலே இருப் பன இவைகள்.

எவ்விதமாயினும், அவற்றிற்குக் கூறப்படும் பலன்கள் சாயாக் கிரகங்களுக்கு கற்பித்திருக்கும் பலன்களையே ஒத்திருக் கின்றன. ஆனால், இந்திய ஜ்யோதிஷ பலபாகம் சாயைகளின் ஸ்திதிகளையும், மேலை நாட்டுப் பல பாகம் இந்த நூதனக் கோள் களின் ஸ்திதிகளையும் கொள்கின்றன.

கோட்சாரம் என்னும் அவ் அப் பொழுதைய கோள் நிலைக ளில் இந்நூதனக் கோள்களின் கதி நீண்ட நெடும் பொழுதாக விருப்பதால், நிச்சய பலன் வகுக்கவோ—அன்றி வகுத்த அவற்றைச் சரி பார்க்கவோ மனித ஆயுளில் அடங்குவ தில்லை. இவ்விதம் அவ் அப் பொழுதைய கோள் நிலைகளாகிற கோட்சார பலன்களில் இவைகளுக்கு பலன் நிச்சயம் செய்யக் கூடாது போயினும், ஒருவருடைய ஜாதகத்தில் இவற்றின் ஸ்திதி களுக்குக் கற்பிக்கப்படும் பலன்கள் யாவும் வரவேற்கக் கூடியன வாக விருக்கின்றன. எனவே, இந்நூதனக் கோள்களின் ஸ்திதி களுக்கு முதலில் வரும் பலன்களை அடுத்த இதழில் விவரிப்போம்.

# தீயோன் ★

(ர. பா. மு. கனி)

★

ஒரு குற்றமும் அறியாத அயலாரைத் தன் காரியங்களைச் சாதித்துக் கொள்வதற்காக நாசஞ் செய்பவனைப் பொதுவாகத் தீயோன் என்கிறோம். தன் தலை தப்பிப்பதற்காக நிரபராதியான கோவலனுக்கு மரண தண்டனை வாங்கித் தந்த வஞ்சிப்பத்தன் இதற்கு ஒரு உதாரணம். இவன் உண்மையிலேயே தீயோனாக இல்லாதிருந்தால் அடுத்தவன் மேல் பொய்க் குற்றம் சாட்டி இருக்கமாட்டான். ஆனால், இவனையும்விடக் கடுமையான கொடியோர்களுண்டு. அவர்கள் தங்களுக்கு எவ்விதமான லாபம் இல்லாமல் இருந்தாலுங் கூட பக்கத்திலுள்ளோரைக் கெடுத்து விடுவார்கள். அதில் அவர்களுக்கு ஒரு மகிழ்ச்சி. அது அவர்களுக்கொரு விளையாட்டு. இத் தீயோர்களும் மனிதர்கள் தானே, ஏன் இந்த விதமாக நிரபராதிகளைக் கெடுக்கவேண்டும் என்றால் அதற்கு விடையறிய மனிதனின் உண்மையான தன்மையை நாம் அறிந்து கொள்ள வேண்டுவது அவசியமாகும்.

உலகிலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் அதிகார ஆசை (Love of Power) இயற்கையாக உள்ளது. இதற்கு மற்றொரு பெயர் தான் குறும்பு செய்யும் ஆசை (Love of Mischief) என்பது. உலகில் முதல் மனிதன் மகிழ்ச்சியோடு முதல் முதலில் சிரித்ததே ஒரு பிராணியைச் சித்திரவதை செய்யும்போது தான் என்கிறார் ஒரு மேனாட்டு ஆசிரியர். இது ஒன்றே குறும்பு செய்யும் ஆசை மனிதனுக்கு இயற்கையாக இருக்கிறது என்பதைக் காட்டும். மேலும், சிறு குழந்தைகள் ஈ, தவளை, எலி முதலியவற்றை மகிழ்ச்சியோடு கொல்வது இந்த ஆசையினால் தான். இன்று பல கோடி மக்கள் தங்கள் உயிரைத் திரணமாக மதித்துப் போரிடுகிறார்கள். இதன் காரணம் ஒரு சிலரின் அதிகார ஆசை தான். இந்த அதிகார ஆசை தான் நாடு பிடிக்கும் போராக, மக்களை மாய்க்கும் யுத்தமாக வெளிப்பட்டிருக்கிறது என்பதை யோசித்தால் அதிகார ஆசைக்கு மற்றொரு பெயர் தான் குறும்பு செய்யும் ஆசை என்பது தெளிவாகும். பர்லினில் குண்டு மாரி பொழிந்து ஆயிரக்கணக்கான மக்களுக்குச் சேதம் என்றால் நாம் ஏன் அதை ஆவலோடு படிக்கிறோம்? ஓரிடத்தில் ஒரு மனிதன் கொலை செய்யப்பட்டுக் கிடக்கிறான் என்றால் நாம் ஏன் அதைப் போய்ப் பார்க்க அவாவுகிறோம்? ஒரு வீட்டில் தீப்பிடித்துக் கொண்டது என்றால் அதைப் பார்க்க ஏன் ஓடுகிறோம்? ஒரு மனிதனை நடுச் சந்தியில் தூக்கில் போடுகிறார்கள் என்றால் அதைப் பார்க்க எத்தனை பேர் கூடுகிறார்கள்? காரணம், நம்மிடம் ஒரு மூலையில் ஒளிந்து கிடக்கும் குறும்பு செய்யும் ஆசை தான் என்கிறார்கள் மனோ தத்துவ நிபுணர்கள். இன்றும் கீழ்த்தரமான சில ஆத்மாக்கள் (?) சில மிருகங்களைச் சித்ரவதை செய்வதில், வேட்டையாடுவதில், உத்சாகமும் அக்கறையும் காட்டுவதைக் காணலாம். மனிதனுடைய மனதில் பலமான உணர்ச்சி எழுச்சிக்கு (Excitement) உள்ள ஒரு இயற்கையான தன்மையே இதற்குக் காரணம். இந்தத் தன்மையைக் கட்டுப்படுத்தத் தான் மானுஷீகக் குணம் (Humanity) அல்லது நீதியுணர்ச்சியுள்ள கடமை (Moral Obligation) மனிதனுக்கு அவசியமாகிறது. இந்த நீதியுணர்ச்சியோ, மானுஷீகக் குணமோ இல்லாதவன் அடுத்தவரைக் கெடுப்பதில் ஆனந்தங் கொள்கிறான். அவனை நாம் தீயோன் என்கிறோம்.

இலக்கியத்தில் துன்பங்களுக்குக் காரணமாக வரும் தீயோர்கள் பலரைப்பற்றி நாம் படிக்கிறோம். கம்ப ராமாயணத்தில் இவர்களின்

வாழ்க்கை யம்சங்கள் பல காட்டப்படுகின்றன. ஆனால், இதில் காட்டப் படும் வாழ்க்கையிலும் ஒரு சில நல்ல அம்சங்கள் இருந்து கொண்டு அவர் களிடம் நாம் அனுதாபம் கொள்ளும்படி செய்து விடுகின்றன. உதாரண மாக, இராவணனைப் பாருங்கள். அவன் தருமத்தின் விரோதி, தவசிகளை யும் மாதரையும் துன்புறுத்தியவன், கற்பின் கொடியைச் சிறை வைத்த வன், களியாட்டங்களில் மயங்குண்டு கிடப்பவன் என்றெல்லாம் படிக்கி றோம். ஆனால் அவனிடமும் ஒரு சில நல்ல குணங்கள் இருப்பதையும் காண்கிறோம். தவத்தில் வல்லவன், நான்கு வேதமும் கற்றவன், சங்கரனை பூஜிப்பவன், அஞ்சா நெஞ்சங் கொண்ட வீரன், இசையில் தேர்ச்சியுள்ள வன், போரில் தான் இறந்து போனாலும் இராமன் பேர் உள்ளளவும் தன் பெயரும் நிலை நிற்கும் என்ற நம்பிக்கை கொண்டவன்.—இந்தவிதமான குணங்கள் அவன் மாண்டுகிடக்கும்போது நம் கண்களில்கூடத் தண்ணீரைக் கொண்டு வந்து விடுகின்றன. அவன் தம்பி கும்பகருணன் பயங்கரமான தோற்றத்தோடு இன்னொரு கொடியோனாக நம் கண்களில் படுகிறான். ஆனால், அவன் இராமன் சத்தியத்திற்காகப் போர் செய்கிறான் என்று சொல்லும் போதும், தன் அண்ணன் குற்றங்களை இடித்துரைக்கும் போதும், செய் நன்றி கொல்லாதவனாக செஞ்சோற்றுக் கடன் கழிக்கப் போர்க்குச் செல்லும் போதும், 'திறந் திறமாகி நின்ற கவிப் பெருங் கடலைச் சிந்தி' இறுதியில் இராமனிடம் உருக்கமாகத் தன் தம்பி வீடணனுக்கு நற்பதவி யளிக்கும்படி வரம் வேண்டும் போதும் நம் மனதை அவன் பக்கம் இழுத்து விடுகிறான். 'என்ன அற்புதமான மனிதனடா இந்தக் கும்ப கருணன்!' என்று கூடச் சொல்லி விடுகிறோம். அது போலவே தான் இந்திரஜித்தும். முழுக்க முழுக்க வெறுக்கும்படியான தீயோர்கள் தமிழ் இலக்கியத்தில் மிகக் குறைவு.

ஷேக்ஸ்பியரின் துன்பியல் நாடகங்களில் (அனேகமாக எல்லாவற்றி லும்) துன்பியலுக்குக் காரணமாக நிற்கும் தீயோர்களுண்டு. ஆனால், பலர் தங்கள் காரியங்களைச் சாதித்துக் கொள்வதற்காக எவ்வளவோ கொடுமை களைச் செய்த போதிலும், ஓரோ விடங்களில் தங்களிடமும் மனித ஹிருதயம் இருப்பதாகக் காட்டிக் கொள்கின்றனர். **ஹேம்லெட்டி**ல் வரும் கிளாடியஸ், **லியர் மன்னனி**ல் வரும் எட்மண்டு, **மெக்பெத்தி**ல் வரும் மெக்பெத், **மூன்றும் ரிச்சர்டு அரசனி**ல் வரும் ரிச்சர்டு மன்னன் ஆகிய கொடியோர்கள் கூடத் தங்களது நற்செய்கைகளால் நம் அனுதாபத்தைப் பெற்று விடுகிறார்கள். **ஒத்தல்லோ**வில் வரும் இயாகோ (Iago) என்னும் கொடியோன் அனேகமாக நம் வெறுப்பு முழுவதையும் சம்பாதிக்கிறான். தன்னை முழுதும் நம்பும் ஒத்தல்லோவை அவன் அறியாமல் செய்த சிறு பிழைக்காக நாசஞ்செய்வது மன்னிக்க முடியாததாகும். இரக்கம் சிறிதுமற்ற நெஞ்சினனாய் இயாகோ, தன் சொந்தக்காரனை ஒத்தல்லோவுக்கு அழகிலும் கற்பிலும் மிக்க அவன் மனைவியின் மீது சந்தேகத்தை யுண்டாக்கிவிட்டு அவளைக் கொல்லும்படி செய்கிறான். பிறகு தன் பிழையை உணர்ந்த ஒத்தல்லோ தன்னையே கொன்று கொள்கிறான். இவர்களைத் தொலைக்க ஒரு கருவியாக உப யோகித்த ஒத்தல்லோவின் நண்பனையும் அங்கஹீனப் படுத்துகிறான். தனது முட்டாள் நண்பன் ராட்டரிகோவிடமிருந்தும் வேண்டும் பணம் கறந்து விடுகிறான். நாடக இறுதியில் இவன் பேரில் நமக்கு உண்டாகும் வெறுப்பு விவரிக்கக் கூடியதல்ல.

இந்த இயாகோவையும் விடக் கொடியவன் ஒருவன் ஷேக்ஸ்பியரின் நாடகமொன்றில் வருகிறான். தனக்கு ஹிருதயம், மனசாட்சி என்பனவே கிடையாது என்று அவனே சொல்கிறான். அவன் வரும் நாடகத்தின் பெயர்

டைடஸ் ஆண்டிரோநிகஸ் (Titus Andronicus). அக்கொடியோன் பெயர் ஆரோன் (Aaron). ஒரு கருப்பு மூர். இவன்செய்யும் பாதகச் செயல்கள் அம்மம்மா! (ஷேக்ஸ்பியர் எப்படித்தான் கற்பனை செய்தானோ?) டைடஸ் ஆண்டிரோநிகஸ் உரோமானியரின் சேனாதிபதி. அவன் கோத் (Goths) ஜாதியாரை வென்று அவர்கள் அரசி டமோரா (Tamora) வையும் அவள் மக்கள் மூவரையும், இந்த ஆரோன் பிசாசையும் கைது செய்து உரோமாபுரிக்குக் கொண்டு வருகிறான். டமோராவின் மூத்த மகனை வழக்கப்படி போரில் மாண்ட உரோமானியருக்காகப் பலி கொடுக்கிறான். உரோமாபுரிக்கு அப்போது தான் அரசனாக்கப்பட்ட-அதுவும் டைடஸ் ஆண்டிரோ நிகஸால்—சேட்டர்னினஸ் (Saturninus) டமோராவின் மேல் காதல் கொண்டு அவளைத் தன் அரசியாக்கிக் கொள்கிறான். இந்த ஆரோன் என்ற கருப்பு மூர் டமோராவின் ஆசை நாயகன். அவன் தன்னைக் கைதியாகக் கொண்டுவந்த டைடஸ்மேல் வஞ்சம் தீர்த்துக்கொள்ள எண்ணுகிறான். அதை அவன் செய்யும் முறைதான் அவன் உள்ளமற்ற மிருகம் என்று காட்டுகிறது. டைடஸ் மகள் லாவினியா (Lavinia) என்ற அழகியை சேட்டர்னினஸின் தம்பியான பஸ்ஸியானஸ் (Bassianus) என்பான் மணம் புரிகிறான். இந்த லாவினியாவின் அழகைக் கண்டு காமுறுகின்றனர் டமோராவின் மக்கள் இருவரும். அவளை அனுபவிக்க அவர்களுக்கு ஒரு வழி சொல்லிக் கொடுக்கிறான் ஆரோன். ஆரோனுடைய சூழ்ச்சிப்படி பஸ்ஸியானஸ் தன் மனைவி லாவினியாவுடன் நடுக்காட்டிற்கு வருகிறான். அங்கே டமோராவின் மக்கள் இருவரும் அவனைக் கொன்றுவிட்டு லாவினியாவைக் கைப்பற்றுகின்றனர். அவர்களிடம், 'நெல்லைக் கசக்கிவிட்டு வைக்கோலுக்குத் தீ வைத்து விடுங்கள்' என்று போதிக்கிறான் ஆரோன். அதன்படி அவர்களிருவரும் லாவினியாவைத் தங்கள் காமப்பேய்க்கு இரையாக்கியபின்பு, அவள் நாக்கையும் இரண்டு கைகளையும் துண்டித்து அக்காட்டில் விட்டுச் செல்கின்றனர். தந்திரமான முறையில் ஆரோன், பஸ்ஸியானஸைக் கொன்ற குற்றத்தை டைடஸின் மக்கள் இருவரின்மேல் சுமத்தி, அரசன் நம்பும்படி செய்கிறான். ஆகவே, அவர்களிருவரையும் தூக்கிலிடும்படி அரசன் உத்தரவிடுகிறான். இதுவிஷயத்தில் குறுக்கிட்டதாக டைடஸின் எஞ்சிய லூசியஸ் என்ற ஒரு மகனையும் தேசப் பிரஷ்டம் செய்யும்படி செய்கிறான் ஆரோன். இவற்றால் மட்டும் அவன் மனம் திருப்தி யடையவில்லை.

வீரன் டைடஸ், உரோமாபுரிக்காக எத்தனையோ போர்க்களங்களில் இரத்தஞ் சிந்திய டைடஸ், தன் இருபத்திரண்டு மக்களை நாட்டுக்காக நடந்த போரில் பலி கொடுத்ததாகக் கூறும் டைடஸ், தன் மக்கள் இருவருக்கும் தூக்கு தண்டனை கிடைத்ததே என்று மனம் புண்பட, அப் புண்ணில் வேல் கொண்டு குத்துவதுபோல் நாவும் கைகளும் இழந்த அவன் மகள் செங்குருதி சோரப் பரிதாபகரமாக அவன் முன்வர, ஒன்றுந் தோன்றாதவனாக இருக்கிறான். அப்போது அவனிடம் வருகிறான் ஆரோன். அவன் மக்கள் இருவரும் கொலை தண்டனையைத் தப்பவேண்டுமென்றால் அவன் தன் ஒரு கையை வெட்டிக்கொடுக்க வேண்டுமென்கிறான். அச்செய்தி டைடஸுக்குச் சிறிது ஆறுதலளிக்கிறது. தன் கை போனாலாவது தன் மக்கள் இருவரும் பிழைக்கட்டும் என்று போர்க்களங்களிலே எதிரிகளைச் சின்னா பின்னப்படுத்திய தன் கைகளிலொன்றை ஆரோனைக் கொண்டே துண்டிக்கச் செய்து அவனிடம் கொடுத்தனுப்புகிறான். ஆனால், சிறிது நேரத்திற்குப் பின் டைடஸ் தலையில் இடிவிழுவதுபோல் அவன் முன்வருகிறது அவனுடைய அருமை மக்களின் இரு தலைகளும் அவன் துண்டித்துக் கொடுத்த கையும்.

இத்துடன் கூட ஆரோன் பிசாசின் வேலை நின்றுவிடவில்லை. அவன் டமோராவுடன் கள்ளத்தனமாகக் கூடியதால் அவள் பெற்ற குழந்தையும்

அவனைப்போல் கருப்பாகவே இருக்கிறது. அரசன் குழந்தையைக் கண்டால் தங்களுக்கு ஆபத்து ஏற்படுமென்று அதை ஒரு தாதியிடம் கொடுத்து ஆரோனிடங் கொடுத்துக் கொன்று எறிந்துவிடும்படி சொல்லியனுப்புகிறுள் டமோரா. ஆரோனுக்குத் தன்னிறத்தில் பிறந்த குழந்தையிடம் ஒரு பற்றுதல் உண்டாகிறது. அது பிறந்தது வெளியில் தெரியாமல் இருப்பதற்காக, அது ஜனிக்கும்போது கூட இருந்த மருத்துவச்சியையும் தாதியையும் தீர்த்து விடுகிறுன்.

டைடஸ் ஆண்டிரோநிகஸின் குடும்பத்தை நாசஞ் செய்த இப்பாவி, டைடஸின் நாடு கடத்தப்பட்ட மகன் லூஸியஸ் என்பான் காத் ஜாதியினரை உரோமானியரோடு போர்புரியத் திரட்டி வரும்போது, அவன் கையில் அகப்பட்டு விடுகிறுன். அவனிடமிருந்த கருப்புக் குழந்தையைப் பிடுங்கிக் கொண்டு அவனைத் தூக்குமேடையி லேற்றுகிறுர்கள். அப்போது தன் கருப்புக் குழந்தையைக் காப்பாற்றுவதாகச் சொன்னல் தான் பல ரகஸ்யங்களை வெளியிடுவதாக லூஸியஸிடம் சொல்கிறுன். அதன்படி வாக்குறுதி செய்து கொடுத்தபின், அவன் எப்படி டைடஸ் மகளைக் கற்பழித்து அங்கவீனப் படுத்தவும், அவள் கணவனைக் கொல்லவும், அந்தக் குற்றத்தை ஒன்றுமறியா லூஸியஸின் சகோதரர் இருவர்மேல் சுமத்தி அவர்களைத் தூக்கிலிடவும் உதவினுன் என்பதை விளக்குகிறுன். "இதுமட்டுமா? நானில்லாவிட்டால் நீ இந்தமாதிரி நாடு கடத்தப்படுவதற்கு வேறு என்ன காரணமிருக்கிறது? உன் தகப்பன் கையைத் துண்டிக்கவும் நான் அவரை ஏமாற்றினேன். அப்போது நான் சிரித்த சிரிப்பில் என் சுவாசப் பையே வெடிக்கப் பார்த்தது. பிறகு உன் இரு சகோதரர்களின் தலைகளையும் உன் தகப்பன் கையையும் அவரிடங் கொடுத்தபோது, நான் ஒரு சுவருக்குப் பின்னுல் நின்று கவனித்தேன். அவர் கண்ணீர் விடுவது கண்டு நான் சிரித்த சிரிப்பில் என் கண்களிலும் தண்ணீர் வந்துவிட்டது. இதை அரசியிடம் சொன்னபோது அவள் அப்படியே மயங்கிவிட்டாள். இந் நற்செய்திக்காக எனக்கு இருபது முத்தங்கள் தந்தாள்."

லூஸியஸ்.—இவ்வளவு பாவச் செயல்களையும் செய்ததற்காக கொஞ்சமும் வருந்தவில்லையா?

ஆரோன்:-ஆமாம், இப்போது நான் வருந்துகிறேன்—இதுமாதிரி இன்னும் ஆயிரம் செயல்களாவது செய்யவில்லையே என்று. ஒரு மனிதனைக் கொல்வது அல்லது அவன் சாவிற்கு வழிதேடுவது, ஒரு கன்னியைக் கெடுப்பது அல்லது அதைச் செய்ய வழிகோலுவது, நிரபராதிகள்பேரில் குற்றஞ் சாட்டி நானே (அவர்கள் அதைச் செய்தார்களென்று) சத்தியம் செய்வது, இரு நண்பர்களுக்குள் கடும் பகையை உண்டாக்கிவிடுவது, ஏழைமக்களின் ஆடுமாடுகளைச் சிதறிச் செல்லும்படி செய்வது, அவர்கள் விழுந்து சாக வழி செய்வது, தானியமிருக்கும் இடங்களுக்கும் வைக்கோல் போர்களுக்கும் இரவில் தீ வைத்து, அவற்றிற்கு உரியவர்கள் தங்கள் கண்ணீரால் அவற்றை அணைக்கும்படி செய்வது—இதுபோன்ற இன்னும் ஆயிரம் செயல்களைச் செய்யவில்லையே என்றுதான் நான் வருந்துகிறேன். எத்தனையோ தடவை இறந்தவர்களைப் புதை குழிகளிலிருந்து தோண்டி எடுத்து, அவர்களின் உற்றுர் தங்கள் துக்கங்களை எல்லாம் அனேகமாக மறந்துகொண்டு வரும்போது, அவர்களின் வாசலில் எறிந்திருக்கிறேன். அவர்களின் (இறந்தவர்களின்) தோளில், பச்சை மரத்தின் பட்டையில் எழுதுவதுபோல என் கத்தியால், 'நான் மாண்டுபோனுலும் உங்கள் துக்கம் மாண்டுபோக வேண்டாம்' என்று உரோமானிய எழுத்தில் செதுக்கி இருக்கிறேன். ஆயிரம்

பயங்கரச் செயல்களை ஒரு ஈயைக் கொல்லும் லகுவுடன் செய்து முடித்திருக்கிறேன். ஆனால் அவைபோல் இன்னும் பதினாயிரம் செய்ய முடியாமல் போகிறதே என்பதைப்போல் எதுவும் என்னை வருத்தவில்லை.

இந்த மாதிரிப் பிசாசுக்குத் தூக்கு தண்டனை போன்ற இனிமையான சாவைக் கொடுக்கக் கூடாதென்று, அவனைத் தூக்குமரத்தி லிருந்து இறக்கிக் காவலில் வைக்கும்படி உத்திரவிடுகிறான் லூஸியஸ். நாடகத்தின் இறுதியில் நெஞ்சளவு ஆழம் வரை ஆரோனைப் புதைத்து, உணவுக்காகக் கத்தியே அவன் சாகும்படி செய்ய உத்திரவாகிறது. அப்போதுங்கூட இப் பிசாசு தான் செய்த பாவச் செயல்களுக்காகச் சிறிதும் வருந்தவில்லை. "நான் இஷ்டப்பட்டிருந்தால் பதினாயிரம் மிக மிகக் கொடுமையான தீமைகளைச் செய்திருப்பேன். **என் வாழ்க்கையிலேயே நான் ஏதாவது ஒரு நல்ல காரியம் செய்திருந்தால் அதற்காக என் மனங் கொண்ட மட்டும் வருந்துகிறேன்**''' என்று தான் அவனுடைய கடைசி வார்த்தைகள் வெளிவருகின்றன.

'இரக்கம் என்று ஒரு பொருள் இல்லாத நெஞ்சினர் அரக்கர்' என்று கம்பர் நெஞ்சில் ஈரமில்லா மாக்களைக் குறிப்பிட்டார். அவர்களையும் நல்லவராக்கும் இத் தீயோனுக்கு நெஞ்சம் என்றே ஒரு பொருள் இருந்திருக்க முடியாது.

---

# தயங்கேன்!

**(செந்தாமரை.)**



தமிழ்மொழியைத் தந்தவரை தினமுழுதும் துதிப்பேன்!
தமிழ்மொழியின் சிறப்பினிலே தனிப்பெருமை கொள்வேன்!
தமிழ்மொழியின் இனிமையினைத் தனித்திருந்து குடிப்பேன்!
தமிழ்மொழியின் அழகினிலே தலைகிறுக்கி விழுவேன்! (1)

தமிழன்னை தருங்கவிதை தனைச்சுவைத்து மகிழ்வேன்!
தமிழன்னை தரும்கீதம் தனில்மயங்கி விழுவேன்!
தமிழன்னை தருநடனந் தனைப்பார்த்துப் புகழ்வேன்!
தமிழன்னை தரும்சிற்பம் தனைக்கண்டு வியப்பேன்! (2)

தமிழ்மக்கள் வாழ்வினிலோர் தனியழகு காண்பேன்!
தமிழ்மக்கள் பண்பினிலோர் தனிச்சிறப்புக் காண்பேன்!
தமிழ்மக்கள் பேச்சினிலோர் தனிஇன்பம் காண்பேன்!
தமிழ்மக்கள் மூச்சினிலோர் தனிசக்தி காண்பேன்! (3)

தமிழ்க்கலையின் தொன்மையினை தினம்நினைந்து பார்ப்பேன்!
தமிழ்க்கலையின் தனித்திலங்கும் தன்மையினை உணர்வேன்
தமிழ்க்கலையை வளர்த்திடவே தினம்முயற்சி செய்வேன்
தமிழ்க்கலைக்காய் என்னுயிரைத் தந்திடநான் தயங்கேன்! (4)

# விஞ்ஞானமும் எண்ணும் எழுத்தும்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)



நீர்வள நிலவள நாடுகளில், மக்கள், நிலையான வாழ்க்கையைத் தொடங்கியபின், மக்கள் தொகை பன்மடங்காய்ப் பெருகிற்று. இவ்வாறு ஏற்பட்ட மக்கள் தொகைப் பெருக்கம், பழங் கற்காலம், புதுக் கற்காலமாய்க் கொண்டுவந்த இடைக்காலத்தில் நேரிட்ட மிகுதியை ஒத்திருந்தது.

இக் காலத்தே, சிறந்த தொழிற் கலைஞர் பலர், நிலையான இருப்பிடங்களில் வாழ்ந்து வரலாயினர். நகரவியலான வாழ்க்கை முறை ஆரம்பமாயிற்று. தொழிற்கலைகளில் சிறப்பு, அப்பொழுது எழுந்த மக்கள் பெருக்கத்தின் நிமித்தம் மிகையானவர் வாழ்தற்கும் இடந் தந்தது. சிற்சில இடங்களில் மட்டுமே, மக்கள், நெருங்கி வசித்து வந்தமையின், அவ்வியலான வாழ்க்கைக்கேற்றதாய் நிறுவப்பட்ட சமூக அமைப்பு முறை சிக்கலாயிற்று. அவ்வமைப்பு முறை நன்கு நிறுவப் படுதற்கான வழியில், பல புதுவகையான இடையூறுகள் மேற்கொள்ளப் பட்டன. விளைச்சலின் மிகுதியால் பெறப்பட்ட தானிய மிகுதியையும் தொழிற் சிறப்பால் உண்டாக்கப்பட்ட பண்டங்களின் மிகையையும், சேமித்து வைப்பதற்கான களஞ்சியங்களும் பண்டசாலைகளும் நிறுவப்பட வேண்டியதாயிற்று. அவற்றை, உறுதியாயும்—நீடித்து நிற்குமாறும்,—வலிமையுடனும் ஆன வகையில் நிருமித்தல் இன்றியமையாததாயிற்று. முதலில், அவை, மரத்தால் கட்டப்பட்டன; பின்னர், பாறைக்கற்களால் பொருத்தப்பட்டன. மெஸோபொடோமியோ நாட்டில் பாறைகள் கிடைத்தல் அரிதானமையின், அந்நாட்டினர் களிமண்ணைச் சுட்டு செங்கல் அறுக்கும் வழிகளைக் கண்டுபிடித்தனர். நகரமொன்றிலுள்ள களஞ்சியங்களும், பண்டசாலைகளும், அந்நகரின் நல்வாழ்க்கைக்கு இன்றியமையாதவை. அவை நகர மைந்தரின் உயிர் வாழ்க்கைக்கு மேலான உணவுப் பொருள்களையும் இன்னும் பலவற்றையும் கொண்டிருந்தன. எனவே, களஞ்சியங்களும் பண்டசாலைகளும், மக்களின் உயிர் நிலைகளென எண்ணப்பட்டு, அவர்களின் பெருமதிப்புக் குகந்தவையாயின. தம் பெருமதிப்புக் குரித்தானவற்றை, மக்கள் பூசித்து, வந்தனை வழிபாடு செய்யலாயினர். தமது நாட்டையே படைத்தவரென எண்ணப்பட்ட, தெய்வீகமான மூதாதையருடன் இணைக்கப்பட்டு, களஞ்சியங்களும் பண்டசாலைகளும், மக்கள் தொழுதற் குரியவையாயின. இங்ஙனம் அவை, நிறுவப்பட்ட சிறிது காலத்திற் குள்ளேயே, களஞ்சியங்களும் பண்டசாலைகளும், கோயில்களுமாயின. பிற்பட்ட காலத்திலேயே, கோயில்கள் தனியாய் கட்டப்பட்டன. மிகவும் பிற்பட்ட காலத்திலேயே, பாறைக் கற்களையும் செங்கற்களையும் கொண்டு, தாம் வதியும் இல்லங்களை மக்கள் கட்டலாயினர்.

களஞ்சியங்களினதும் பண்டசாலைகளினதும் பாற்பட்ட நிர்வாகமும், வேளாண்மைகளினின்றும் தொழிற் கலைகளினின்றும் எழுந்த வணிகமும், செம்மையாய் நடைபெற வேண்டியதற்கென பொருள்களின் அளவும்—நிறையும்—தொகையும் காட்டும் எண்கள் பெறுதற்கான குறியீடு முறையும், வரவு செலவுக் கணக்கு வைத்துக் கொள்ளும் வழிகளும், நடவடிக்கைகளைக் குறிப்பிட்டுக் கொள்ளும் இடவைகளும் கண்டு பிடிக்கப்பட்டன. இவ்வழிகள் எல்லாவற்றிற்கும் அடிப்படையான முறைமை, அளவு—நிறை—தொகை இன்னோரன்னவற்றைக் குறிக்கும் அடையாளமாகிய எண்ணேயாம். எனவே, எண் எழுத்துக்கு முன் எழுந்தது. சுமேரியா, எகிப்து ஆகிய நாடுகளில் முதன் முதலாய் வரையப் பட்ட சாசனங்கள், எண்களாலேயே யானவை.

ஒரேயாற்றின் கரைகளில் பல இடங்களில், நகரங்கள் எழுந்தன. அவை நிலையாயின. அவற்றில் வாழ்ந்தவரும் நிலையான குடிமக்களாயினர். இவ்வாறான நகரங்கள் பல எழுந்தன. அந் நகரங்கள் பலவற்றினிடை, சீக்கிரத்தில் பலவகைகளில் வணிக முறையினின்றெழுந்த போட்டிகள் ஏற்படலாயின. ஒவ்வொரு நகரத்திலும், உணவுப் பொருள்கள் மிகுதியானதாலும், தொழில்கள் சிறப்புற்றதனாலும் நகரத்தினர் எல்லோரும் வேலை செய்ய வேண்டியதான நிலைமை மாறியது. இதனால், ஒவ்வொரு நகரிலும், எத் தொழிலிலு மீடுபடாத மக்கள் பலர் தோன்றினர். இவ்வாறானவரைக் கொண்ட படைகளைத் திரட்டி போட்டியிட்ட நகரங்கள் ஒன்றுடனொன்று போரிடலாயின. ஒவ்வொரு நகரிலும், முக்கியத்துவ மதிப்பு பெற்றிருந்த பண்டசாலை—களஞ்சிய—கோயில்களின் நிர்வாகப் பொறுப்பாளிகளான குருமார்களில் தலைவரானவரும், படைதிரட்டிச் சேனைநடத்துவதில் வல்லுனரானவரான அவர் துணைவரும் படைத் தலைவர்களாயினர். திறமையுடன் படையை நடத்தித் துணிவுடன் போர்செய்து பகைவரை வென்ற தலைவர்கள், தம் நகரத்திற்கும் தாம் வென்ற நகரத்திற்கும் மன்னர்களாயினர். நகரங்களின் மேல் போர் தொடுத்து, அவற்றை யெல்லாம் கைப்பற்றியவர், நாடாளும் அரசராயினர். இவ்வகையில் கி. மு 3200-ம் ஆண்டில் மெனிஸ் என்ற குறுநில மன்னன், அநேக போர்களில் வெற்றி பெற்று, பல நகரங்களை யடக்கி, எகிப்து நாட்டின் அரசனானான். இவ்வாறே, கி. மு. 2750-ம், ஆண்டில் சார்கான் என்ற படைத்தலைவன், மெஸோபொடோமியா நாட்டின் அரசனானான். தம் நாட்டிற்கு அரசரானவர், வேறு பல தூர நாடுகள்மீது படையெடுத்துச் சென்று, அவற்றையும் வென்று வேந்தர் அல்லது சக்கிரவர்த்திகள் ஆயினர். கோயில்களின் வரவு செலவுக் கணக்குகள் குறிக்கப்பட்டதாள்களே முதன் முதலாய் வரையப்பட்டவை. அவற்றிற்கு அடுத்தவையாய் ஏற்பட்ட வரைக் குறிப்புக்கள், பல நகரங்களிடையெழுந்த போர்களையும், போர்கள் முடிந்தபின் ஏற்பட்ட உடன்படிக்கைகளையும் பற்றிய குறிப்புக்களைக் கொண்டவையேயாம்.

ஓராட்சியின் கீழிருந்த மக்கள் சமூகம், முதலில் நகரவியலா யிருந்து, பின்னர் பெரும் நாடுகளின் பாற்பட்டதாய்ப் பெருக்க மடைந்தது. அந்நாடுகளிலுள்ள சிலரிடம் மட்டுமே பெரும் பொருள் சேறிதற்குப் பிரமேயம் ஏற்பட்டது. பெருநிதி திரட்டிய பெருஞ் செல்வர் சிலர் ஆங்காங்கு தலைப்பட்டலாயினர். இவ்வாறு உயர்ந் தோங்கிய செல்வர், தம் பெருநிதி பாற்பட்ட நடவடிக்கைகளை யாற்றுதற்கும், பெரும் நாட்டில் பரந்திருந்த தம் வியாபாரத்தை நிர்வாகம் செய்தற்கும், சுருக்கமான வகையில் வரவு செலவுக் கணக்குகளை வைத்துக் கொள்வதற்கும், நடவடிக்கைகளைக் குறித் துக் கொள்வதற்கும் ஆன வழிகளைக் கண்டுபிடித்தல் அவசியமா யிற்று. இவ்வகையில், நாம் இப்பொழுது கையாளும் இலக்கவி யல் எண் முறை, பாபிலோனியரால் கண்டுபிடிக்கப் பட்டது. இவ் வெண்முறை எழுந்து வழங்கப்பட்டு வந்து காலத்தே, அக் காடியர்கள் மற்றோர் வகையான எண் முறையை யேற்படுத்தினர். அக்காடியர்கள் சுமேரியர்களை போரில் வென்றனர். அக் காலத்தே, அவர்கள் சுமேரியர்கள் கண்டு பிடித்திருந்த எண் முறை யொன்றை அவர்களிடமிருந்து கற்றனர். அவ் வெண் முறையைக் கையாண்டு, அதை விருத்தி செய்தனர். வளமுற்ற அவ் வெண் முறையைக் கொண்டு, அக்காடியர், மேலான விளைவு களைப் பெற்றனர். இதனால் பாபிலோனியரது எண் முறை வழங் குதல் தடைப் பட்டது. அது சிதைவுற்றது.

எழுத்து, படம் வரையும் முறை சிறத்தலால் தோன்றியது. முதலில், பொருள்கள், அவை போன்ற படங்களை வரையப்பட்ட வகையில் குறிக்கப்பட்டன. பின்னர், வழக்கத்தில் வந்தவகை யில், எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட அடையாளவியலான படங்களால் பொருள்கள் குறிப்பிடப்பட்டலாயின. எகிப்து நாட்டி னரும், சுமேரியர்களும், இவ்வாறான படவியலான குறியீடுகளா லான லிபியையே கையாண்டு வந்தனர். எகிப்தியரின் லிபி, ஐந்நூறு குறியீடுகளைக் கொண்டது. சுமேரியரின் லிபியில் கூம் பியலான குறியீடுகள் ஆயிரம் உள்ளன. இப்பொழுது நாம் உபயோகித்து வரும் வகையான எழுத்து முறை, (அதாவது, சில அடிப்படையான எழுத்துக்களைக் கொண்ட நெடுங்கணக்கு அல் லது அரிவரியைக் கொண்டு, சொற்களையும் வாக்கியங்களையும் அமைத்தல் முறை) நீண்ட காலத்திற்குப் பின்னரே கண்டு பிடிக்கப்பட்டது. எகிப்தியரும், சுமேரியரும், எழுத்தைக் கண்டு பிடித்ததற்கு ஈராயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரும், மக்களில் சிலரே எழுத்தறி திறனைப் பெற்றிருந்தனர். எனவே, எழுத்துக் கலை மெல்லவே வளர்ந்து வந்தது. அக்கலையில் பயிற்சி பெற்றுத் தேர்ச்சியடைவதற்கு நீண்ட காலம் பிடித்தது. இவ்வாறு எழுத் துக் கலையில் பயிற்சியுறுவதற்கான காலம் மற்ற கலைகளில் தேர்ச்சியுறுவதற்கான காலங்களை விட மிக அதிகமானதாய் ஏற்பட்டது என்பது, எழுத்து கண்டுபிடிக்கப்பட்ட பின் சமூக வியல் மாறின வகைகளுக்கான காரணங்களில் முகக்கியமான தொன்றும். எழுத்தாளர், மற்ற கலைஞரினின்று முற்றும் வேறு

பட்ட வகையானவர் என்று ஏற்பட்டது. இதனால், அவர்கள் மற்ற தொழிற் கலைஞருடன் தொடர்பில்லாதவராயினர். எழுத்துக் கலைப் பயிற்சியில் தேர்ச்சியடைவதற்கு நீண்டகாலம் பிடித்ததால், அக்கலையைப் பயிலும் மாணாக்கர், அக்காலம் முற்றும் சமுதாயப் பொதுவினால் ஆதரிக்கப்பட்டு வந்தனர். கோயில்களிலும், அரண்மனைகளிலும் நிர்வாக அதிகாரிகளா யிருந்தவரே, எழுத்துப் பயிற்றுவிக்கும் ஆசிரியராயு மிருந்தனர். இவ்வாறு எழுத்தாளரும், எழுதப் பயின்று வந்த மாணாக்கரும், நாட்டின் ஆட்சியாளருடன் தொடர்பு கொண்டிருந்தமையின், எழுத்துக் கலை கண்ணியமானது என மதிப்புற்றது. தொழிற்கலைகள் கீழ் வகையானவை என எண்ணப்பட்டன. கி. மு. 1200-ம் ஆண்டில் எழுதப்பட்டதென ஏற்பட்ட சாசனமொன்றில் எகிப்திய எழுத்தாளன் ஒருவன் எழுதியுள்ளவை பின் வருமாறும். "எழுத்தை உன் இருதயத்தில் பொறிந்துவை. தொழில் செய்வதாலான கடினமான உழைப்பினின்று, நீ, உன்னைக் காத்துக் கொள்வாய். உயர் மதிப்புடன் போற்றப்படும் நீதிபதியாவாய்." "உலைக்கு முன் நின்று வேலை செய்யும் கொல்லன், முதலையினது போன்ற விரல்களைப் பெற்றவன். அவனின்று மீன் சினையினதை விட அதிகமான முடை நாற்றம் அடிக்கும்." "தறியின் முன் உட்கார்ந்து வேலை செய்யும் நெசவன், பெண்பிள்ளையை விடக் கீழானவன். வயிற்றில் முழங்காலைச் சேர்த்துக்கொண்டு, குந்திக் கொண்டிருக்கின்றான். நல்ல தூற்றேட்டத்தை அனுபவிக்க இயலாதவன்."

(தொடரும்)

# எண்பதாண்டான இளைஞர்

(கு. அழகிரிசாமி.)



நான் பள்ளிக்கூடத்தில் நாலாவது பாரம் படித்துக் கொண்டிருந்தபொழுது ஒரு சம்பவம் நடந்தது. அதாவது ஒருநாள் மாலை, வட இந்தியாவிலோ அல்லது நம் மாகாணத்திலோ, நன்ருக் ஞாபகமில்லை. ஒரு காலேஜில் புரபொசராக உள்ள ஒரு முஸ்லீம் அறிஞர் நான் படித்த பள்ளிக்கூடத்துக்கு எதற்கோ வந்திருந்தார். அவர் ஆங்கிலத்தில் மிகவும் திறமையாக சொற்பொழிவு ஆற்றும் வல்லவர் என்பதனால் அன்று மாலையில் எங்கள் மாணவர் சங்க ஆதரவில் ஒரு மாணவர் கூட்டம் நடந்தது; அதில் அந்தப் புரொபசர் பேசினார். எனக்கு அவர் பேசும் ஆங்கிலம் அந்த சிறுவயதில் விளங்கவில்லை. ஒருவிஷயம் மட்டும் புரிந்தது: அதாவது, வெள்ளைக்காரக் கிழவி ஒருத்தியிடம் ஒருவர் "உங்களுடைய வயது என்னவோ?" (How many years are you old?) என்று கேட்டாராம். அதற்கு அந்தப் பாட்டி, "எனக்கு எழுபத்தைந்து வயது நிரம்பிய **இளமை**" (I am seventy five years young) என்று வேடிக்கையாகச் சொன்னளாம். இந்த விஷயத்தைப் பிரசங்கி சொல்லும்போது எங்கள் கூட்டத்தில் ஒரே சிரிப்பு பிய்த்துக் கொண்டு போய்விட்டது. அந்தப் பாட்டி பொல்லாத பாட்டியாக இருந்திருக்க வேண்டும். தனக்கு வயது எழுபத்தைந்து ஆகியும் தன் இளமைத் துடிப்பு போகவில்லை என்று பெருமையோடு பதில் சொல்லும் பாக்கியம் பெற்ற பாட்டிதான்.

நம் சமூகத்திலும் பல வயதான இளைஞர்கள் இருந்தார்கள்; சிலர் இருக்கிருர்கள். இப்போதும் நாகரிகம் என்று நாம் கருதி அனுஷ்டிக்கும் பழக்க வழக்கங்களைக் கண்டறியாத காலத்தில் அவர்களுடைய வாலிபம் துள்ளி விளையாடி யிருக்கிறது. அப்படிப்பட்டவர்கள், பிற்காலத்தில் இந்த அனர்த்தம் விளைவிக்கும் 'நாகரிகம்' குடியேறிய பின்னும் தங்கள் நல்ல வழக்க ஒழுக்கங்களை நெகிழ விடாமல் இருந்திருக்கப் போய், இன்றும் எண்பது, எண்பத்தைந்து, தொண்ணூறு இப்படி நூறு வருஷத்துக்கு மேலும் காலத்தை சீக்கு சிப்பந்தி இல்லாமல் கழித்துக்கொண்டு போகிருர்கள்.

வயது சென்ற ஆட்களைப் பார்த்தால் எனக்கு ஒரு உணர்ச்சி எழுவது உண்டு. அதாவது, அந்த வயோதிகர்களுக்கு, ரயிலே இல்லாமல் ஜனங்கள் கால் நடையாகப் பிரயாணம் செய்தது, இங்கிலீஷ் படிப்பில்லாமல் தமிழையே நன்ருகப் படித்து முன்னுக்கு வந்தது, தந்தி, டெலிபோன் ஒன்றுமில்லாமல் நிம்மதியாக வாழ்க்கை நடத்தியது, பீரங்கி, குண்டு முதலியவற்றை அறியாமல் பரஸ்பரம் அன்போடு ஜனங்கள் நடந்து கொண்டது எல்லாம் தெரியும் அல்லவா? நமக்கு இதெல்லாம்

தெரிந்திருக்க நியாயம் இல்லை. அவர்கள் அதோடு சமூகத்தில் இந்த நாகரீகக் கறை படிந்ததையும் பார்த்து விட்டார்கள். தந்தி, தபால், சினிமா, ரேடியோ முதலிய நல்ல கருவிகள் கண்டு பிடிக்கப்பட்டு பழக்கத்துக்கு வந்ததும், அவைகள் கெட்ட காரியங்களுக்கு உபயோகப்படுவதும் எல்லாம் அவர்களுக்குத் தெரிந்திருக்கும். ஆகவே, வயது சென்றவர்களைக் காணும்போது அவர்கள் எல்லாவற்றையும் பார்த்தவர்கள் என்பதனால் ஏதோ உணர்ச்சிகள் நம்மிடம் உண்டாவது உண்டு.

சுமார் ஒரு மாதத்துக்கு முன் தென்காசிக்குச் சமீபமாக உள்ள ஒரு ஊருக்கு என் ஜோலியின் நிமித்தம் போக வேண்டியிருந்தது. உடனே அந்த ஊருக்குப் பக்கத்தில் உள்ள வெள்ளக்கால் என்ற ஊருக்கு, மேற்கண்ட உணர்ச்சிகள் மனதில் கரை புரளச் சென்றேன் ஒரு 'வயதான இளைஞரை'ப் பார்க்க. அந்த 'இளைஞ'ரைத்தான், கவிஞர் மணி ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை "எண்பதாண்டான இளைஞனே!" என்று தம் அருமையான கவியால் வாய் நிறைய அழைத்திருக்கிறார். அந்த 'இளைஞர்'தான் முது பெரும் புலவர் ராவ்சாகிப் ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள்.

வீடு தேடிப் போய விசாரித்தேன். "மாடியில் படித்துக் கொண்டு இருப்பார்கள். நீங்கள் போகலாம்" என்று உத்தரவு கிடைத்தது. போனேன். அந்த வாலிபக் கிழவர் ஒரு புஸ்தகத்தில் மனதைப் பதிய வைத்து புஸ்தகத்தைப் பார்த்த வாக்கில் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பின்பக்கமாகச் சந்தடி செய்யாமல் போய் பார்த்தேன். கம்பராமாயணத்தில் உயுத்த காண்டம்தான் அந்த புஸ்தகம் என்று தெரிய வந்தது. நான் வந்ததை அறிந்து ஆசனமளித்து அன்போடு உட்காரச் சொன்னார்கள். புஸ்தகத்தை கீழே வைத்துவிட்டு ஏறிட்டுப் பார்த்தார்கள்.

"எனக்கு கோவில்பட்டி பக்கம்" என்று என்னை அறிமுகப்படுத்திவிட்டு, மிகவும் வியப்போடு, "கண்ணாடியில்லாமல் இவ்வளவு பொடி எழுத்துக்கள் தெளிவாகத் தெரிகின்றனவா? வெள்ளெழுத்து என்று ஒன்றும் உங்களுக்குக் கிடையாதோ?" என்று கேட்டோம்.

"வெள்ளெழுத் தெல்லாம் ஒரு குறிப்பிட்ட வயதில் வந்து சுமார் ஆறேழு வருஷங்கள் இருக்கும். அப்புறம் போய்விடும். அதனால் எனக்கு வாசிக்க முடிவதில் ஆச்சரியமில்லை. ஆனால், வேறு காரணங்களுக்காக சிறு வயதிலேயே கண்ணாடி போடுகிறார்களே, அதைத்தான் எப்போதும் போக்க முடியாது" என்று சொன்னார்கள். இளவயதில் கண்ணாடி போடும்படியான நிலைமைக்கு ஆளாக்கிய நாகரிகத்தையே குத்திக் காட்டுவதுபோல் இருந்தது அவர்கள் சொன்ன சொல். ஏன் சொல்ல மாட்டார்கள்? இந்த வயோதிக பருவத்திலும் ஒவ்வொரு காரியத்தையும் ஒழுங்காக காலாகாலத்தில் முடித்து இளமையோடு உலாவும்

பாக்கியம் படைத்தவர்கள் பெருமைப்பட்டால் அது நியாயம் தானே!

"உடல் நிலை சுகமாகத்தானே இருக்கிறது?"

"சுகத்திற்கு ஒன்றுமில்லை. ஆனால், நாளுக்கு நாள் தளர்ச்சி தான்" என்றார்கள்.

அடுத்தபடி தமிழைப்பற்றி ஏதாவது பேசச் செய்து கேட்க வேண்டும் என்னும் ஆசையால், "தங்களுடைய புத்தகங்கள் சில வற்றை வாசித்திருக்கிறேன். தங்களைப் பார்க்கவேண்டும் என்று வெகு நாளாக ஆவல். தமிழிலும் எனக்கு ஆவல்" என்றேன்.

அவர்களுடைய மனம் ராமாயணத்தில் ஆழ்ந்திருந்தமையால் என் பேச்சு முடிந்ததும், ராமாயணத்தைக் கையில் எடுத்தார்கள்: அவர்கள் படிப்பு இன்று ஒரு நாளைக்கு கெட்டாலும் கெடுகிறது என்று நினைத்துக்கொண்டு, அவர்களிடம் பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தேன். அவர்களும் புத்தகத்தை வைத்து விட்டு தமிழில் படிக்க வேண்டிய புத்தகங்களையும் அவைகளை எந்த முறையில் படிக்கவேண்டும் என்றும் எடுத்துச் சொன்னார்கள்.

"தமிழில் கம்பராமாயணம், குறள், காஞ்சிப் புராணம் இவை எல்லாம் அவசியமாய் படிக்கவேண்டிய புத்தகங்கள். இப்படி எல்லாப் புத்தகங்களையும் படித்துவிட்டு, தணிகை புராணம் போன்ற சற்று கடினமான நடையில் எழுதப்பட்ட புஸ்தகங் களைப் படிக்கவேண்டும். எந்தப் புத்தகத்தை எடுத்தாலும் முதலில் முகவுரையைக் கட்டாயம் படித்துவிட்டுத்தான் புஸ்த கத்தைப் படிக்கத் தொடங்கவேண்டும். முகவுரையைப் படித்து விட்டால் அப்புறம் அவரவர்களுக்கு இஷ்டமான பாகத்தை எடுத்துப் படிக்கலாம்.........தமிழோடு ஆங்கிலத்தில் உள்ள இலக்கியங்களையும் கற்கவேண்டும்'.'

நான் சில விபரங்களை அவர்களிடம் கேட்க ஆரம்பித்தேன்.

"நீங்கள் எந்தத் தமிழ் வித்துவானிடமாவது முறைப்படி பாடங் கேட்டீர்களா?"

"ஊஹூம். அதெல்லாம் கிடையாது. திருநெல்வேலி ஹிந்து காலேஜிலும், சென்னை கிறிஸ்டியன் காலேஜிலும் வாசித் தேன். அங்கே தமிழ்ப் பண்டிதர்களிடம் பள்ளிப் படிப்பாக படித்தததுதான். அப்புறம், நானாக ஆர்வத்தோடு படித்தேன்.'

"உத்தியோகமும் பார்த்துக்கொண்டு படிக்கச் சாவகாசம் கிடைப்பது அபூர்வமாயிற்றே?"

"ஆமாம். ஆனால், நான் என் உத்தியோகத்தைக் கெடுத் துக்கொண்டு ஒரு நிமிஷம் கூட தமிழ் படிக்கவில்லை. உத்தியோக வேலையெல்லாம் முடிந்து ஒழிந்த நேரத்தில் தான் படிப்பேன். அதனாலே, என் படிப்பினால் என் உத்தியோகக் கடமைகளை நிறைவேற்றுவதில் ஒரு நிமிஷம்கூட தவறியதில்லை. வயதாகி அனுபவம் நிறைந்தவன் என்ற முறையில் நான் சொல்லுவது இதுதான். ஒருவருக்கு எவ்வளவு தமிழ் ஆர்வம் இருந்தாலும்

உத்தியோகம் பார்க்கும் நேரத்தில் எந்தப் புஸ்தகத்தையும் தொடவோ அதுபற்றிப் பேசவோ கூடாது. அப்படிச் செய்தால் அது ஒழுங்கீனம்தான். தன் கடமையைச் செய்துவிட்டு மிஞ்சியுள்ள ஒரு விநாடியையும் வீணாக்காமல் படிக்கவேண்டும். அப்படித்தான் நாங்கள் எல்லாம் படித்தது. என்னுடைய உத்தியோக காலத்தில் நான் ஒருவனே பத்து ஆட்கள் செய்யும் வேலையைச் செய்திருக்கிறேன் என்று எனக்கு மேல் அதிகாரியாக இருந்த உத்தியோகஸ்தர் புகழ்ந்து பாராட்டினர். யாவரும் அப்படித்தான் நடந்துகொள்ள வேண்டும்.''

''நீங்கள் சென்னைக்குப் படிக்கப்போனது எப்போது?''

''1878-ம் வருஷத்தில் தான் நான் கிறிஸ்டியன் காலேஜில் சேர்ந்து படிக்க சென்னைக்குப் போனது''

''அப்போது ரயில் கிடையாதே?''

''அந்த சமயத்தில் தபால் வண்டி ஒன்று, மாட்டு வண்டி ஒன்று திருச்சி வரையும் போகும். அதில் மூன்று நான்கு நாட்கள் பிரயாணம் செய்து, அப்புறம் திருச்சியிலிருந்து ரயிலில் போகலாம். அங்கிருந்து சென்னைக்கு ரயில் உண்டு. தபால் வண்டியின் மாடுகளை சுமார் பத்து மைலுக்கு ஒருதரம் மாற்றுவார்கள். அங்கங்கே மாடுகள் தயாராக நிற்கும்.

''இங்கிலாந்தில் ஸ்டேஜ் கோச் (Stage Coach) என்று இருந்தது என்று சொல்லுகிறார்களே, அதுபோலத்தான்போலிருக்கிறது?''

''அதே மாதிரித்தான். இரண்டு முதலாளிகளோ, அல்லது மூன்று முதலாளிகளோ பணம் போட்டு இந்தத் தபால் வண்டிக் கம்பெனி நடத்தி யிருக்கலாம்.''

''அப்பொழுது திருச்சிக்கு எந்த வழி?''

''தற்போது உள்ள மெயின் ரோடுதான். அதாவது கோவில் பட்டி மார்க்கமாகவோ சங்கரன் கோவில் மார்க்கமாகவோ, போக வேண்டும். சரியாக ஞாபகமில்லை.''

பழையபடியும் ராமாயணத்தை எடுத்துப் பார்க்கத் தொடங்கி விட்டார்கள். இதற்கு முன் எத்தனை தட்வைகள் இந்த ராமாயணத்தைப் படித்திருப்பார்கள்! இருந்தாலும் இந்த முதுமைப் பருவத்திலும் எவ்வளவு ஆர்வம்!

ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால் சற்றேனும் சோம்பாமல் ஒரு முறைக்கு பத்து முறை எழுந்து சென்று பீரோவைத் திறந்து புத்தகங்களைப் புரட்டிப் பார்ப்பார்கள். நமக்கு ஒரு காரியத்துக்கு ஒரு தட்வை எழுந்து செல்வதே சலிப்பாக இருக்கிறது. உத்தியோகஸ்தன் பிள்ளை சேவகனைக் கூப்பிட்டு எடுக்கச் சொல்லுவான். சாதாரணமானவன் தன் தம்பியை ஏவுவான். அப்படிக் கெட்டழிந்து போய்விட்டோம்.

தமிழில் சகல நூல்களையும், ஆங்கிலத்தில் பேரிலக்கியங்கள் பெரும்பாலானவற்றையும் கற்ற முது பெரும் புலவரின் தரிசனம்

கிடைத்ததை நினைத்தாலும் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்குகிறது எண்பத்தேழு வயது நிரம்பிய இந்த தள்ளாத காலத்திலும் எந்தக் காரியத்துக்கும் குறித்த நேரத்தை வைத்துக்கொண்டு காலத்தைக் கழிக்கிறார்கள். காலையில் அருணோதயத்துக்கு முன் எழுந்து உலாவிவிட்டு வருகிறார்கள். படிப்பதும் உண்பதும், உறங்குவதும் எல்லாம் குறிப்பிட்ட காலத்தில் ஒரு நிமிஷம் கூட எந்த விஷயத்திலும் தவறுவதில்லை.

அவர்களுடைய நேரம் திட்டம் நிறைந்த வாழ்க்கையை நினைத்தால் அவர்கள் இயற்றிய 'அகலிகை வெண்பா'வில் ஒரு பாட்டு ஞாபகத்துக்கு வருகிறது.

ஒரு மனிதன் ஏதாவது ஒரு வரன்முறையோடு வாழ்க்கை நடத்தத் தொடங்குகிறான் என்று வைத்துக் கொள்வோம். சிறிது காலத்தில் அவன் ஏதோ சற்று சலிப்பினால், தன் வழக்கமான கட்டுதிட்டத்தை கொஞ்சம் நெகிழவிடுகிறான் என்றும் வைத்துக்கொள்வோம். அப்புறம் கொஞ்ச காலம் கழித்து வேறொரு விஷயத்தையும் அலட்சியம் செய்துவிடுவான். கடைசியில் முதலில் அனுஷ்டித்த கட்டுத் திட்டங்கள் எல்லாம் மலையேறிப் போய்விடும்.

அகலிகை மிக்வும் கற்புடைய பெண். ஏதோ இந்திரனுடைய பலாத்காரத்தால், நிராதரவான நிலையில் தன் கற்பொழுக்கத்தை இலேசாகத்தான் விட்டுக் கொடுத்தாள். ஆனால் கடைசியில், கொஞ்சம் பிசகப்போய் முற்றிலும் கெட்டழிய வேண்டியதாய் விட்டது. இதை நினைத்து நினைத்து ஏங்குகிறாள் பேதை.

இதுவரையும் கற்பு என்ற மலையின் உச்சியில் ஏறி பெருமையோடு நின்றேன். இப்போது கொஞ்சம்தான் சற்று சாய்ந்தேன்.

"நிறையாம் குன்(று)ஏறி நிமிர்வு உற்று நின்றேன்
இறை சாய்ந்தேன்;"

சாயப்போய் என்ன ஏற்பட்டது?

"சாயவே, என்னை—அறியாமே
வீழ்ந்தேன்; அதோ கதியே மேவினேன்;"

கொஞ்சம் வழுவியதால் எவ்வளவு எவ்வளவு அதல பாதாளத்தில் விழ வேண்டியதாகிவிட்டது. அதுமட்டு மில்லை. மிக மிகத் தாழ்ந்தவர்கள் என்றிருப்பார்களே, அந்தக் கீழானவர்களுக்கும் கீழானவர்களை விடத் தாழ்ந்த நிலைக்கு வந்துவிட்டாளாம், பாவம்.

"தாழ்ந்தாரில்
தாழ்ந்தார் தமில்தாழ்ந்தேன் தான்"

எவ்வளவு பரிதாபம்! ஒரே நிமிஷ மயக்கம் எத்தனை காலமாகப் போற்றிப் பேணிய கட்டுத் திட்டத்தைத் தகர்த்து நாசமாக்கிவிட்டது. அகலிகையின் துயரத்தைச் சொல்லும் சொற்களில் கண்ணீராக வழிகிறது. பாட்டின் சொற்களைப் பிழிந்தால் கண்ணீர் வரும்போல இருக்கிறது.

# டாரா ★ (கு. ராஜாராம்)

★

பாரசீக தேசத்தை ஆண்டுவந்த மன்னன் சந்ததியின்றி மாண்டான். சிங்காதனத்தை அடையப் பலர் கிளம்பினர். போட்டியின் காரணமாக நாட்டில் குழப்பம் ஏற்பட்டது. அமைதி ஓடி ஒளிந்தது.

டாரா என்னும் இடையனொருவன் மலைப்பாங்கான பிரதேசத்தில் வசித்து வந்தான். டாரா தன்னுடைய கிராமத்தாரைக் கூட்டி, அவர்கட்கு விஷயங்களை ஊட்டி, அமைதியை நிலை நாட்டினான் தன் கிராமத்தில்.

மெல்ல மெல்ல புத்திசாலித்தனமாகப் பலம் சேர்த்துப் பக்கத்துக் கிராமங்களிலும் அமைதி நிறுவினான்.

இச்சமயம் திடீரென்று ஒரு அரசன் தோன்றினான். தன்னுடைய மிகுந்த சாமர்த்தியத்தினால் அரசைக் கைப்பற்றி விட்டான். அவன் மிகவும் அறிவாளி. பலாட்டிகன், அரியாதனம் ஏறி அமர்ந்ததும் தேசத்தைச் சீர்திருத்தம் செய்வதில் முனைந்தான். நாட்டிலுள்ள பலசாலிகளையும், அறிவிற் சிறந்தோரையும் தேடுவித்தான். டாரா அரசனின் கண்களில் படாமல் போகவில்லை. டாரா செய்த அரும்பெரும் காரியங்களைப் பற்றிக் கேள்விப்பட்டான். வியந்து டாராவை ஒரு மாகாணத்திற்குச் சிற்றரசனாக்கினான்.

இடையனாயிருந்த டாரா சிற்றரசனான போதிலும் சிறிதேனும் கர்வம் கொள்ளாமல் அமைதியாய் நீதி நெறி பிழையாது ஆண்டு வந்தான். நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டு உழைத்தான். மற்ற மாகாணங்களைவிட, டாராவின் மாகாணம் தலை சிறந்து விளங்க ஆரம்பித்தது.

அரசனுக்கு டாராவின் காரியங்கள் மிகுந்த திருப்தி அளித்தன. டாராவை மெச்சி வெகுவாகப் பாராட்டினான் அரசன். இருக்க இருக்க டாராவின் புகழ் பரவியது.

இதைக் கண்ட இதர சிற்றரசர்கள் பொறாமை யடைந்தனர். 'அற்ப இடையனுக்கு இவ்வளவு புகழா?' என்ற எண்ணம் அவர்

---

"நிறையாம் குன்(று) ஏறி நிமிர்வு உற்று நின்றேன்
இறை சாய்ந்தேன்; சாயவே, என்னை—அறியாமே
வீழ்ந்தேன்; அதோ கதியே மேவினேன்: தாய்ந்தாரில்
தாழ்ந்தார் தமில் தாழ்ந்தேன் தான்."

சொல்லிலும் செயலிலும் ஒன்றுபோல் நடக்கும் 'அபூர்வமான' குணத்தைப் படைத்த அபூர்வமான 'இளைஞர்' திரு. வெ. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் என்பது தெள்ளத் தெளிவாகி விட்டது.

கள் மனதில் எழுந்தது. டாராவின் பெருமையைக் குலைக்க எண்ணி அரசனிடம் சென்று புகார் செய்தனர்.

அவர்கள், "அரசே, டாரா எங்கு சென்றாலும் தன்னுடன் ஒரு ஒட்டகத்தின்மேல் பெரிய பெட்டியொன்றை ஏற்றிக் கொண்டே செல்கிறான். பெட்டியின் பாரத்தினால் அந்த ஒட்டகத்தின் முதுகுகூட வளைந்து விட்டது. அப்பெட்டிக்குள் என்ன இருக்கிறதென்று டாராவுக்கு மட்டுந்தான் தெரியும். அதை ஒரு தடவை திறந்தபோது அதிலுள்ள எண்ணற்ற வைரம், நவரத்தினம் இவை ஜொலித்த ஜொலிப்பில் கூடாரம் முழுவதுமே ஒரே ஜோதிமயமாய் விளங்கியது. அவ்வளவையும் தனக்கென வைத்திருக்கிறான்" என்றனர்.

அரசனுக்குச் சினம் எழுந்தது. உடனே அவன் டாராவின் மாகாணத்திற்குச் சோதனை செய்யப் புறப்பட்டான்.

சிற்றரசன் டாரா மன்னனை ராஜரீகமுறையில் மிகவும் அன்புடன் வரவேற்றான். அப்பொழுது டாராவினருகில் மற்ற குறுநில மன்னர்கள் கூறியபடி ஒட்டகம் ஒன்று ஒரு பிரமாண்டமான பெட்டியைத் தாங்கி நின்றது. குற்றம் வெளிப் பட்டது. அரசனின் கண்கள் சிவந்தன. மீசை துடித்தது.

"டாரா, இப்பொழுது பெட்டியைத் திற, அதில் நீ எவ்வளவு செல்வத்தை அபகரித்து வைத்துள்ளாய் என்று நாம் பார்க்க வேண்டும்...உம், திற" எனக் கதறினான் அரசன்.

டாரா தயக்கமின்றி பெட்டியைத் திறக்கச் செய்தான். உள்ளே அழுக்குப் பிடித்த கிழிந்த இடையன் அணியும் அங்கி ஒன்று இருந்தது.

வந்தவர்கள் அனைவரும் வெட்கிப்போய் தலை குனிந்தனர்; ஆனால் டாரா களங்கமற்ற நீல வானத்தைப்போல் நின்றுகொண்டிருந்தான்.

"இது என்னுடைய ஆத்மா போன்றது. மக்களை ஆள மந்திரம் போல்வது. விவேகமாக ஆட்சி புரிய என்னிடம் சொற்பத்திறனே இருந்த போதிலும், நான் இன்னும் முன்போலவே எளிமையாக இராமலிருந்தால் செங்கோல் என் கையில் நிலைத்திராது; இழந்தே இருப்பேன்," என்று தாழ்வுடன் கூறினான் டாரா.

அரசனின் முகம் ஆச்சரியத்தால் மலர்ந்தது. பொறாமைக் கூட்டம் தகுந்த தண்டனை அடைந்தது.

பொழுது இன்னும் சாயவில்லை. அதற்குள் டாராவின் ஒரு மாகாணத்தோடு இன்னும் இரண்டு மாகாணங்கள் சேர்த்துக் கொடுக்கப்பட்டன.

**(ஆங்கிலச் சிறுகவி ஒன்றைத் தழுவி எழுதியது.)**

---

# தியாகம் 

(எஸ். ஆர். தங்கவேலு.)



வங்காளத்திலே துர்க்கர்நந்தி என்றோர் கிராம முண்டு. அக் கிராமம் நீர்வள நிலவளங்கள் பூரணமாக அமையப்பெற்று எங்கு நோக்கினும் பச்சைப்பசேலென புன்முறுவல் பூத்து விளங்கியது. கிராமத்தின் ஓர் புறத்தே அன்னை பராசக்தியின் கோயில் ஊருக்கு அழகு செய்யா நின்றது. பூஜை நேரங்களில் கோயில் மணியின் தெய்வீக நாதம் மக்களை ஆனந்த வாரிதியி லாழ்த்தும். மக்கள் தெய்வ வழிபாடுடையோராய் இல்லறம் இனிதே ஓம்பி வந்தனர்.

எல்லோரும் இன்புற்றிருக்க ஓர் குடியானவனும் அவன் மனைவியும் பிள்ளையில்லாது பெருங்குறையால் பெரிதும் வாடினர். அல்லும் பகலும் அனவரதமும் வேண்டினர். அவர்களது உண்மை பக்திக்கு மெச்சிய பகவான் கடைக்கணித் தருளினார். ஓர் சுப முகூர்த்தத்திலே குடியான மாது ஓர் ஆண் மகவை ஈன்றெடுத்தாள். குழந்தைக்கு துர்க்காதாஸ் எனப் பெயரிட்டு பெற்றோர் கழிபேருவகை அடைந்தனர்.

காலச் சக்கரம் வேகமாக 16 தட்வை சுற்றி விட்டது. நமது துர்க்காதாஸ் இப்பொழுது தனியனாக இல்லை. 7 வயது நிரம்பப் பெற்ற "கைலாச நாத்" தனது முன்னவனை மகிழ்வித்தான் கைலாசநாத் பிறந்த அடுத்த மாதமே குடும்பத்தலைவன் எமன் பதி ஏகினார். குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பு துர்க்காதாஸின் தோள்மேல் விழுந்தது.

சின்னஞ்சிறு வாலிபன்; வாழ்க்கையின் மாயா ஜாலங்களையும் மேடு பள்ளங்களையும் அறியாதவன். துர்க்காதாஸ் ஒரு சிறு திண்ணைப் பாடசாலை ஒன்று அமைத்து அதில் வரும் வருவாயைக்கொண்டு தனது தாயையும் பின்னவனையும் போஷித்து வந்தான். தனது தாய் கணவன் பிரிவிற் காற்றாது எப்பொழுது பார்த்தாலும் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருப்பதைக் காண அவன் மனது மிக்க வேதனையடையும். "அம்மா நீங்கள் வீணே வருத்தப்படுவதால் வரும் பயனென்ன? எல்லாம் விதியின் விளையாட்டு; நாமெல்லோரும் விதியின் கையில் சிக்கிய விளையாட்டுக் கருவிகள். எனது அப்பா பரலோகம் சென்றார். நாமும் சிறிது காலத்தில் அவரைப் பின்பற்றப் போவோம். அம்மா நீங்கள் அழாதீர்கள். எனது இதயம் வெடித்து விடும்போலிருக்கிறது."

"கண்ணே, நீ சொல்லும் உண்மைகளை யெல்லாம் நானறியாதவளல்ல. அவர் இறந்த அன்றே நானும் உயிர் துறந்திருப்பேன்; ஆனால் உங்கள் பொருட்டல்லவா எனது பூதவுடலைச் —ந்து கொண்டிருக்கிறேன்."

பஞ்சம்! பஞ்சம்! கொடிய பஞ்சம்! திடீரெனப் பல வருஷங்களாக மழை இன்மையால், ஆறு, குளம், குட்டைகளிலெல்லாம் நீர் அநேகமாக வற்றிப் போயிற்று.

விவசாயம் என்பதே இல்லாது மக்கள் தனியாய்த் தவித்தனர். மரங்களெல்லாம் இலை உதிரப்பெற்று கட்டைகளாக நின்றன. தங்கள் அந்திய காலத்தை எதிர்நோக்கி பசுக்கள் அங்கங்கே படுத்துக் கிடந்தன. எங்கு நோக்கினும் கட்டாந்தரைகளும் பொட்டல் வெளிகளும் ஆயின.

ஏற்கனவே கஷ்ட ஜீவனம் செய்து வந்த துர்க்காதாஸின் நிலைமை செப்பத் தரமல்ல. பசியால் வாடும் தனது தாயையும் தம்பியையும் காண நெருப்பி லகப்பட்ட புழுவெனத் துடித்தான். வேளாவேளைகளில் சரியான ஆகாரம் இன்மையால் எலும்புந் தோலுமாகக் காணப்பட்டான். தினம் அதிகாலையில் எழுந்து அக்கம் பக்கம் கிராமங்களுக்குச் சென்று ஏதோ கிடைத்ததைக் கொணர்ந்து கொடுத்து மகிழ்வான். தனது தாயையும் பின்னவனையும் மகிழ்விப்பதே தனது வாழ்க்கையின் லக்ஷியம் எனக் கொண்டான். அவர்கள் பொருட்டு எப்போர்க்கொத்த தியாகத்தைச் செய்யவும் அவன் தயாரா யிருந்தான்.

ஒருநாள் ஆகார நிமித்தமாக அதிகாலையில் எழுந்து நடக்க வாரம்பித்தான். எங்கும் ஒன்றும் அகப்படவில்லை. அதிகாலையில் எழுந்து நடக்க வாரம்பித்தவன் உச்சிப் பொழுதாகியும் இன்னும் நடந்துகொண்டே செல்லுகின்றான். சூரியன் மேற்குக்கடலில் மூழ்கப் போகின்றான். கடைசியாக, கிராமத்தின் ஓர் கோடியிலே சில பெண்கள் தானிய மரைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். களிபேருவகை கொண்டான்.

அவர்களிடம் சென்று தனது நிலைமையைக் கல்லும் கரையுமாறு சொன்னான். உடனே அப் பெண்கள் தங்களால் இயன்ற தானியத்தையும் மாவையும் கொடுத்து அதிக நேரமாய் விட்டபடியால் உடனே புறப்படுமாறு சொல்லிக் கண்ணீர் சிந்தி நின்றனர்.

ஐயோ பாவம்! அதிகாலையில் எழுந்து நடக்க வாரம்பித்தவன் இன்னும் ஒரு கவள ஆகாரமேனும் கொண்டானில்லையே! வேளா வேளைகளில் சரியான ஆகாரம் இல்லாது விசனத்தால் பீடிக்கப்பெற்று எலும்பு மனிதன் போன்றல்லவா காணப்படுகின்றான்! கிடைத்த தானியத்தையும் மாவையும் ஆயிரந் துவாரங்களாக் கிழிந்த தனது அங்க வஸ்திரத்தின் கிழியாத ஓர் பாகத்திலே வைத்துச் சுருட்டி கட்கத்தில் வைத்துக்கொண்டு அதிவேகமாக நடக்க லுற்றான். தாய்க்குரங்கு தனது குட்டியைப் பாவிப்பது போன்றல்லவா பாவிக்கின்றான் அத் தானிய மூட்டையை!

எலும்புக்கூடு நடந்து போவதன்ன நடந்து செல்லுகின்றான். தள்ளாடித் தள்ளாடி நடந்து செல்லுகின்றான். பகவானே! அதி காலையில் நடக்க வாரம்பித்தவன் இன்னும் ஒன்றும் வயிற்றிற்குக் கொண்டானில்லையே! பசியோ காதை அடைக்கிறது; கண்கள் இருளுகின்றன. கால்கள் தடுமாறுகின்றன. "பசி வந்தால் பத்தும் பறந்து போம்" என்னும் மூதுரை துர்க்காதாஸிடம் பொய்த்துப் போய்விட்டது.

பசியின் கொடுமையால் மூட்டையில் இருக்கும் தானியத்தில் ஓர் பிடி எடுத்து வாயில் போட்டுக் கொள்ளலாமாவென நினைப்பான். உடனே வீட்டின் ஞாபகம்; ஐயோ எல்லாம்வல்ல இறைவனுக்கு என்ன அபராதம் செய்து விட்டோமென கண்ணீர் மாலை மாலையாகச் சிந்துவான். ஓட்டமும் நடையுமாக நடந்தான். வீட்டிலே தனது தாயும் தம்பியும் பசியால் வாடுவதை நினைக்க நினைக்க ஆயிரம் ஈட்டிகள் ஒருமிக்க தலையில் ஏறுவதைப் போன்ற வேதனையை அடைந்தான்.

சந்திரன் தனது கிரணங்களை வாரி இறைத்துக்கொண்டிருந்தான். எங்கும் கண்ணுக்கெட்டிய தூரம் கட்டாந்தரைகளும் பொட்டல் வெளிகளும் காணப்பட்டன. இயற்கையும் "ஓம்" எனச் சொல்லிக்கொண்டிருந்தது. துர்க்காதாஸால் நடக்கவே முடியவில்லை. கால்கள் தடுமாறுகின்றன; கண்கள் இருளுகின்றன. உடனே வீட்டின் எண்ணம் வர ஓட்டமும் நடையும் ஏற்பட்டது. ஆகா! அந்த எலும்புக் கூட்டிற்கு அவ்வளவு வேகமாக நடக்க பலம் எங்கிருந்து வந்தது!

இனி ஓரடியும் வைக்க இயலாது. அதோ உற்றார் உறவினர் பந்துமித்திரர் அற்ற அந்தக் குடை வேல மரத்தடியில் சென்று சிறிதுநேரம் இளைப்பாறி விட்டுச் செல்லலாமென அதை நோக்கி நமது தியாகமூர்த்தி நடக்கலுற்றான்.

திடீரென ஓர் செறிந்த அந்தகாரம். காதுகள் அடைத்துக் கொள்கின்றன. கண்கள் இருளுகின்றன. கால்கள் ஒன்றையொன்று பின்னிக் கொள்ளுகின்றன. ஒரே அந்தகாரம் பூர்ணச் சந்திரன் மேலே சிறிது சஞ்சரித்த மேகக் கூட்டத்தினூடே மறைந்தான்: மழையும் சிறிது தூறியது.

மறுநாட் காலையிலே வழிப் போக்கர்களிற் சிலர் அதோ தூரத்தில் தெரியும் குடை வேலமரத்தடியில் ஓர் வெண்மையான பொருள் கிடக்கக்கண்டு அது என்னவெனச் சென்று பார்க்கையில் அது ஓர் சிறுவனின் பிரேதம் எனத் தெரிந்தது. அவ் வெலும் புந்தோலுமான தேகத்திற்கு அவ்வளவு சாந்தமான முகம் எங்கிருந்து வந்தது? அது ஏன் அவ்வளவு இறுக்கமான ஓர் மூட்டையை நெஞ்சோடு நெஞ்சாக பிடித்துக்கொண்டிருக்கிறது?

---

# உண்மை வீரம்

(எஸ். ராமஸ்வாமி அய்யங்கார்)



வீரத்தில் தலை சிறந்தது நம் நாடு. நம் நாட்டின் வீரத்தைப் புகழ்ந்து பல புலவர்கள் பாடியுள்ளனர். கம்பர் கவிகளிற் சிறந்தவர். அவரியற்றிய இராமாயணம் நவ ரசங்களுக் கிருப்பிடம்; உண்ண உண்ணத் தெவிட்டாத செந் தேனூற்று. இக்காவியத்தில் கம்பன் உண்மை வீரம் எது என்பதை நன்கு விளக்கிக் காட்டுகின்றார்.

இந்திரசித்து போர்க்களத்தில் உயிர் துறந்தான் என்ற செய்தியைக் கேட்ட மண்டோதரி, ஓடோடியுஞ் சென்று, தனயன் மேலுள்ள ஆசையினால் அவன் மேல் சோர்ந்து வீழ்ந்து, அறிவு குலைந்து உயிரற்றவள் போலானாள். பின்பு மெல்ல மெல்லச் சோர்வு நீங்கி, அறிவடைந்து, பலவாறு அலறிப் புலம்பலுற்றாள்.

"பஞ்செரியுற்ற தென்ன வரக்கர்தம் பரவை யெல்லாம்
வெஞ்சின மனிசன் சொல்ல விளிந்ததே மீண்டதில்லை,
அஞ்சினே னஞ்சினேனச் சீதை யென் றமுதாற் செய்த
நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளை யித்தகையனன்றோ!"

என்று புலம்பிய விஷயங் கேட்ட இராவணன் மிக்க கோபங் கொண்டு, "என் சுற்றத்தார்க்கு மரணத்தைத் தேடித் தந்தவள் சீதையல்லவா? அதை இப்பொழுதே அறிந்தேன். அவ்வஞ்ச கியை என் கை வாள் கொண்டு வீழ்த்துகின்றேன்" என்றோடி னான். அவ்வாறு ஓடும் இராவணனை மகோதரன் தடுத்து, கொடியை யொத்த இடையையும், சிவந்த வாயையும், இளமை யழகு மாறாதவையுங் கொண்ட ஓர் பெண்ணின் மேல் வாளை உபயோகித்தால் அவ்வாளானது வெட்கத்தால் முனை மடிந்து போகுமேயல்லால் அவளது ஆவியை வாங்காது என்ற நீதியைக் கூறினான். ஸ்திரீ ஜாதியாகவும், தவப்பெண்ணாகவும் உள்ள சானகியைக் கொன்றால் அது இராவணன் பலவீனத்தைத்தான் காட்டும். ஸ்திரீகளை வெல்ல முயலுவது இயற்கை வீரத்திற் கொவ்வாத செயலாம். சீதை மாண்டால் இராம இலக்குமணர் சண்டையை விடுத்துச் செல்வர். அதுபோழ்து இராவணனால் இராம இலக்குமணர்களை ஜயிக்க முடியவில்லை என்பது ஏற் படும். அது உண்மை வீரத்திற் கழகல்ல. இவையனைத்தையும் மகோதரன் ஏற்ற முறையில் இராவணனுக்கு எடுத்தோதினன்.

இது கேட்ட இராவணன் மயக்கம் தெளிந்தான். தான் செய்யப்புகுந்த வீரமற்ற செயலை விடுத்தான். இதனால் பெண்ணை எதிர்த்தல், பெண்ணை கொல்லப் புகல் வீரமல்ல என் பதனைக் கம்பர் மிக அழகிய முறையில் எடுத்துக் காட்டுகின்றார்.

தாட்கை ஓர் அரக்கி. மன்னுயிரனைத்தையும் வயிற்றிலிடும் கொடுஞ் செயல் வழி நிற்பவள். இராமனது உயிருக்கே நடுக்கம் உண்டாகக் கொடுந்தொழிலில் அமர்ந்தவள். எனினும், இராமன் 'உண்ணென வடிக்கணை' விட்டிலன். ஏன்? 'பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்.' இங்கு கம்பர் இராமனது உயரிய வீர லக்ஷணத்தை தெள்ளத் தெளியக் காட்டுகின்றார்.

முதல் நாட் போரில் இராவணன் தோல்வியுற்று படைக் களத்தில் முகங்கருகிப் போய் கால் விரல்களால் நிலத்தைக் கீறிக் கொண்டும், தலைகளைக் கவிழ்த்துக் கொண்டும், தரையைப் பார்த்துக் கொண்டும் தன்னந்தனியே நின்றான். இவ்வாறு வெறுங் கையுடனிருப்பவனைக் கொல்லலாகாதென எண்ணிய இராமன் இராவணனைப் பார்த்து, "இன்று போய் நாளை வா" என்றும் "உன்னால் சேகரிக்கக் கூடிய படை திரட்டி வா" என்றும் கூறினார் என்றால், உண்மை வீரத்தின் மாண்பு என்னே! இதைக் கம்பர் நமக்கு எடுத்துக் காட்டும் அழகுதானென்ன!

இராவணன் இவ்வாறு தோற்று தன் நகர் மீண்டனன். இவனை இக் கோலத்துடன் வருணிக்கப் புகுந்த கம்பர் அவனது மனோ நிலைமையையும் கூறி உண்மை வீரம் எது என்பதையும் காட்டுகின்றார்.

"வானமும் மண்ணுமெல்லாம் நகும் நெடுவயிரத்தோளான்
ஈனகும் பகைஞரெல்லாம் நகுவரென்றதற்கு நாணன்
வேனகு நெடுங்கட் செவ்வாய் மெல்லியல் மிதிலைவந்த
சானகி நகுவளென்ற நாணத்தாற் சாம்புகின்றான்."

வானுலகத்துள்ளோரும், மண்ணுலகத்துள்ளோரும், பகைஞரும் தான் தோல்வியுற்றதைக் கண்டு சிரிப்பார்களே யென்று இராவணன் வருத்தப்படவில்லையாம். கூரிய வேலாயுதத்தைப் பார்த்து சிரிக்கும் கூர்மை வாய்ந்த கண்களையுடைய சானகி சிரிப்பளே என்று துக்கித்தானும் இராவணன். இதுவோ உண்மை வீரத்தன்மை என்று கம்பர் எள்ளி நகையாடுகின்றார். எனவே, ஒரு பெண்ணின் பொருட்டு ஆற்றும் வீரச்செயல் வீரமாகாது என்பது கம்பர்தம் கருத்து. இந்த ஆழ்ந்த கருத்தைக் கம்பர் எத்துணை சிறந்த முறையில் நமக்கு எடுத்துக் காட்டுகின்றார்.

முன் காலத்தில் சுயம்வர மண்டபத்தில் ஓர் பெண்ணை மணக்க புரியும் வீரதீரச் செயல்கள் சில உள. அவையும் உண்மை வீரத்தின்பாற் செய்யும் வீரச்செயல்களாகா. ஏன்? அவை தன்னலங் கருதியவை. இராமன் சீதா சுயம்வர மண்டபத்தில் வில்லிறுத்த செய்கையைக் கூறுமிடத்துக் கம்பர்,

'நச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவளென்றால் இச்சிலை இடக்க மலையேழையு மிருனோ' என்று இயம்புகிறார். இதிலுள்ள சொல்லழகு எத்துணை இன்பம் தருகின்றது.

இராம பாணங்களுக் காற்றுது பயந்தோடும் அரக்கரை தூடணன் நிறுத்தி வீரச்சுவை யூட்டுவது உண்மை லக்ஷணங்களைக் காட்டி நிற்கின்றது.

அரக்கர் பயந்தோடுவதைக் கம்பர் நம் கண்களுக்கெதி ரட்டபது போன்று சித்திரித்துக் காட்டுகிறார்.

"மண்டியோடினர் சிலர், நெடும் கடகரி வயிற்றில்
புண்டிறந்த மாமுழையிடை வாளொடும் புகுவார்
தொண்டை நீங்கிய கவந்தத்தை துணைவ! நீ எம்மைக்
கண்டிலேன் எனப்புகல் எனக்கை தலைக் கொள்வார்"

இவ்வாறு 'உயிரினும் இனியதொன்றில்லை' என்றெண்ணும் பயங் கொள்ளிகளின் வீரம் வீரமாகா தென்பதைக் காட்டுகின்றார் கம்பர்.

"வச்சையாமெனும் பயமனத் துண்டெனவாழும்
கொச்சை மாந்தரைக் கோல்வளை மகளிரும் கூசார்.
நிச்சயம் எனும் கவசந்தான் நிலைநிற்ப தன்றி
அச்சமும் எனும் ஈதாருயிர்க் கருந்துணையாமோ."

"ஆரவாழ்க்கையின் வணிகரா யமைதிரோ அயில்வேல்
வீரவாட் கொழுவென மடுத்துழுதிரோ வெறிபோர்த்
தீரவாழ்க்கையில் தெவ்வரைச் செருவிடைப் பறித்த
வீரவாட் கையிர் எங்கனம் வாழ்திரோ விளம்பிர்"

வீரமே உயிர்த்துணை என்றும், போரில் முதுகு காட்டி ஓடுவதால் அபகீர்த்தி யேற்படுவதுடன் பெண்களின் வெறுப்பையும் பெற ஏதுவாம் என்றும் இதனாற் காதலின்பங் கெடுமென்றும் தூடணன் கூறுகின்றான். இது உயரிய வீரலக்ஷணத்தைக் காட்டுகின்றது.

கம்ப இராமாயணம் நவரசங்களுக் கிருப்பிடம். தொட்ட தொட்ட இடங்களில் அவரவர்க்குத் தேவையான இரசங்கள் தோன்றும். தூய மனப்பான்மையுடன் இதைப் படித்தின்புறுதல் வேண்டும்.

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப் - சு. மீ. கணபதி)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

விமலா வாசுவைப் பார்த்து இரண்டு கைகளையும் குவித்து, "என்னைத் தாங்கள் அறிவீர்க ளல்லவா?" என்ருள். வாசு தன் தலையை அசைத்தான்.

"இவர் மிஸஸ் கமலாவின் சகோதரர்.......இவர் பெயரென்ன?" என்ருள் கமலாவைப் பார்த்து.

"நன்ருக அறிமுகப் படுத்துகிருய்" என்று கூறி பூர்ணிமா, "நமஸ்தே" என்ருள் வாசுவைப் பார்த்து. அவனும் பதில் வந்தனம் செய்தான்.

கமலா தன் பொறுப்பை அறிந்து, "இவர் என் சகோதரர். வாசுதேவன் என்று பெயர். மதுரபுரி கலெக்டரேட்டி லிருக்கிருர்" என்று ஆங்கிலத்தில் அறிமுகம் செய்துவைத்து தமிழில், "இவர்கள் எங்கள் கிளப்பின் தலைவர், அவர் காரியதரிசி. விமலாவைத்தான் உனக்குத் தெரியும். அவள் உப காரியதரிசி" என்ருள்.

"இவர்க ளெல்லோரையும் அறிந்ததில் சந்தோஷம். நீங்கள் பேசிக் கொண்டிருங்கள். நான் பக்கத்து அறைக்குச் செல்கிறேன்" என்ருன் வாசு.

"இல்லை. உங்களைக் காணவே வந்தோம். எங்கள் காரியதரிசிக்கு தமிழில் பேச வராது. அவர் உங்களை அழைப்பதற்காக வந்திருக்கிருர்" என்று தலைவி கூறி பூர்ணிமாவைப் பார்த்தாள்.

"நாளை மாலையில் எங்கள் கிளப்பில் தாங்கள் பிரசங்கம் செய்ய வேண்டும். எந்த சமாசாரத்தைப் பற்றிப் பேசினுலும் எங்களுக்குத் திருப்தி தான். தங்கள் பிரசங்க வன்மையை மிஸ். விமலா மூலம் அறிந்து வந்தோம். மறுக்கக் கூடாது" என்ருள் பூர்ணிமா.

"ஓ! இதற்காகவா வந்தீர்கள்? நான் வருந்துகிறேன். எனக்குப் பிரசங்கம் செய்து பழக்கமில்லை. பெரிய கூட்டம் என்ருல் எனக்குப் பேசுவதற்கே முடியாது. தயவு மன்னிக்க வேண்டு" மென்று விமலாவைப் பார்த்து, "என்னிடம் முன்பே கேட்டிருந்தால் நான் சொல்லியிருப்பேனே. இவர்களுக்கு அனுவசியமாகத் தொந்திரவு கொடுத்து விட்டாயே" என்ருன் வாசு.

"மறுக்கக் கூடாது. எவ்வளவு சுருக்கமாக பிரசங்கஞ் செய்தாலும் சரி தான். விஷயம் குறிபிட்டுப் பேச வேண்டும் என்றும் நாங்கள் கேட்டுக் கொள்ளவில்லை. கூட்டத்தில் பேசுவதில் கஷ்டமிருக்காது" என்ருள் தலைவி.

"வாசு! எதையாவது பற்றிப் பேசு. அவர்கள் விரும்பி வந்த பின்பு மறுத்தல் நியாயமல்ல" என்ருள் கமலா.

"எதைப்பற்றிப் பேசச் சொல்கிறீர்கள். அதையாவது தெரிவித்தால் முடியுமா எனச் சிந்திக்கிறேன்."

"பெண்டிருக்காகத்தானே பிரசங்கம். அவர்களுக்கு உகந்த விஷயத்தைப் பற்றிப் பேசுங்கள். வேறு விதமாய் நினைத்துக் கொள்ளக் கூடாது. தமிழில் பேசினால் சிலருக்கு அறிந்து கொள்ளுவது சிரமம். ஆங்கிலத்திலேயே பிரசங்கம் செய்ய வேண்டும். உதாரணத்திற்கு நானிருக்கிறேன்" என்றாள் பூர்ணிமா.

"சரி, உங்களுக்கு எது இஷ்டமோ அதைப்பற்றி தலைப்பு போடுங்கள் மணிப்படி காரியங்களை ஆரம்பிக்க வேண்டும்."

"அப்படியே ஆகட்டும், தங்களுடைய உதார குணத்திற்கு நன்றி செலுத்துகிறோம். காலையில் விஷயத்தின் தலைப்பைத் தெரியப்படுத்துகிறேன்" என்றாள் பூர்ணிமா. அதன் பின்பு கமலாவைப் பார்த்து "உன் புருஷன் ஊரிலில்லையா? எப்பொழுது வருவார்?' என்று கேட்டாள்.

"ஏன் அவரையும் பிரசங்கிக்கச் சொல்லப் போகிறீர்களா? நாளை மாலை வருவதாகத்தான் சொன்னார். சொந்த ஊராகிய ராஜபுரிக்குச் சென்றிருக்கிறார்."

"அவரைத் தான் தலைமை வகிக்கச் சொல்வதாக உத்தேசித்திருக்கிறோம். நிச்சயம் நாளை மாலை வந்து விடுவாரென்றால் அவர் சம்மதத்தைத் தெரிந்துகொள்வது நல்லது."

"இல்லாவிட்டால் சம்மதமின்றியே அவரை தலைமை வகிக்க கட்டாயப்படுத்துவீர்களோ" என்றாள் கமலா.

"நீங்கள் இங்கு இருக்கும் வரை அவரை கட்டாயப்படுத்த உங்கள் உதவியை நாடுவோம். மணி ஐந்து அடிக்கப் போகிறது. சீக்கிரம் பதிலுக்குக் கட்டி அவருக்கு ஒரு தந்தி அனுப்பி வைக்க வேண்டும். நாங்கள் செல்ல விடை பெற்றுக் கொள்கிறோம்" என்று பூர்ணிமா சொல்லி கைகளை குவித்து பொதுவில் நமஸ்காரம் செய்தாள். மற்ற இருவரும் அப்படியே செய்தனர்.

"விமலா, நீ சற்று தங்கிப் பிறகு போகலா" மென்று கமலா சொல்லி பதில் வணக்கம் செய்து அவர்களை வழி யனுப்பி வந்தாள். "விமலா, என்னிடம் கூடக் கூறாது இவர்களை அழைத்து வந்து விட்டாயே. அப்படிப் பிரமாதப் பிரசங்கம் இவன் செய்வான் என நினைக்கிறாயா?"

"நான் அப்படித்தான் நினைக்கிறேன். முதலில எனக்கு இந்த ஐடியா-அட! யோசனை தோன்ற வில்லை. வீட்டிற்குச் சென்றதும் யோசித்தேன். இங்கு நான் மட்டில் வந்திருந்தால் இவர் மறுத்திருப்பார்."

"அம்மா! என்னை லகுவில் விடமாட்டீர்கள் போல் தெரிகிறது. தவிரவும் என்னைப்பற்றி பிரசாரம் வேறு செய்திருக்கிறீர்களே. தமிழ் உங்கள் காரியதரிசிக்குத் தெரியாது எனப் பல முறை சொல்லியதி லிருந்து நல்ல பிரசாரம் செய்திருக்கிறீர்க ளெனத் தெரிகிறது."

"தோழரே! மன்னித்துக் கொள்ள வேண்டும். தாங்கள் அறியாதது ஒன்று மிருக்கப் போவதில்லை. குறைந்தது இரண்டு நாழிகையாவது தங்கள் பேச்சு இருக்குமென நினைக்கிறேன்."

"தலைப்புத் தெரியாதபொழுது சொல்வதற்கில்லை. எனக்குப் பிறகு யாராவது பேசப் போகிறார்களா?"

"ஆமாம். மிஸஸ். பூர்ணிமா பேசுவாள். அவளும் நன்றாகப் பேசக் கூடியவள் தான். தாங்கள் சீக்கிரமே வந்துவிட வேண்டும். கமலா, உங்களையும் தான் குறிப்பிடுகிறேன்."

"சரிதான் விமலா, நீயும் பேசலாமே நாளைக்கு. உன்னுடைய அபிப்பிராயங்களும் வெளியானல் நல்லது. அதற்காகத்தான் உன்னை இருந்து போகச் சொன்னேன்."

"இவர்கள் பேச்சுக்கும் எனக்கும் வெகு வித்யாசம். நான் பேச ஒப்புக் கொள்வது பைத்தியகாரத்தனமாகி விடும். நான் சென்று வருகிறேன். எல்லோருக்கும் தகவல் தெரிவிக்க வேண்டும். தோழரே! உத்திரவு கொடுக்கிறீர்களா?" என்ருள் சிரித்துக்கொண்டு.

விமலா "தோழரே" என அழைத்ததைக் கண்டு எல்லோரும் சிரித்தனர். "உங்கள் சிரிப்பின் காரணமென்ன?" என்ருள் விமலா.

"தோழரே என்ருயே அதற்குத்தான்" என்ருள் கமலா.

"வேறுவிதம் கூப்பிட எனக்குத் தெரியவில்லை. மாமா, அண்ணு என்று பிறரை அழைப்பதை (உறவில்லாதவரை) நான் விரும்பவில்லை."

"தோழர் என்ற பதம் நல்ல தமிழ்தான். அது நல்ல அர்த்தம் கொடுப்பது. சமதையை அது குறிக்கிறது" என்ருன் வாசு.

"நான் பிறகு வருகிறேன்" எனக் கூறி விமலா சென்ருள்.

"வாசு! கௌரவம் உன்னைத் தேடி வந்திருக்கிறது. மாப்பிள்ளையே தலைமை வகிக்கப் போகிருராம். அவர்கள் கொடுக்கும் தலைப்பு எதுவாயிருந்தாலும் பேசுவாயா?" என்ருர் அவன் தகப்பனர்.

"அதைப்பற்றிக் கவலையில்லை. பிரமாதத் தலைப்பு கொடுத்து விடப் போகிருர்களா என்ன? சாதாரணமாக இருக்கும். கமலா, உனக்கு கிளப்பில் உத்யோக மில்லையா?"

"நான் கிளப்பின் உபதலைவியா யிருக்கிறேன். பொக்கிஷதாரராகவு மிருந்தேன். அந்தப் பதவியை வேண்டாமென்று நீ வந்து சென்ற பின்பு கூறி விட்டேன். உன் பிரசங்கம் வெகு நன்ருக இருக்கும் என நம்புகிறேன்."

பின்னர் வேறு விஷயங்களில் சம்பாஷணை சென்றது.

மறுதினம் காலையில் தலைப்பு வாசுவுக்குக் கொடுக்கப்பட்டது. "பெண்கள் சம்பந்தமான விஷயங்கள்."

ஒருவர், இருவராக பிரசங்கம் செய்பவரைப் பார்க்க வந்து கொண்டிருந்தனர். வாசுவுக்குப் பரம சங்கடமாக இருந்தது.

மணி பதினென்று இருக்கும். சாப்பிடுவதற்கு உட்காரும் சமயம் பூர்ணிமா கையில் தந்தியுடன் வந்து, "மிஸ்டர் ஸ்ரீகாந்தன் சம்மதித்து விட்டார். மாலை 5 மணிக்கு வைபவம் ஆரம்பித்து விடலாம். தகவல் சொல்வதற்குத்தான் வந்தேன். மாலையில் மறுபடியும் வருகிறேன் என்று கூறிச் சென்ருள்.

மாலை மூன்று மணிக்கெல்லாம் சப்கலெக்டர் வீட்டிற்கு வந்தார். வாசு, நீ எப்பொழுது வந்தாய்?" எனக் கேட்டார். பின்னர், "மாலையில் எனக்கு ஒரு அலுவலிருக்கிறது லேடீஸ் கிளப்பில். பிறகு உன்னிடம் சாவகாசமாகப் பேசுகிறேன்." என்ருர்.

"லேடீஸ் கிளப்பில் உங்களுக்கு என்ன அலுவலிருக்கப் போகிறது? எனக்குத் தெரியாமல் லேடீஸ் கிளப்பில் வேலை-நல்ல விளையாட்டுத்தானிது". என்ருள் கமலா.

எனக் கருதி அவ்விதமே நடக்கின்றனர். தாய் மொழியைவிட அன்னிய பாஷையின் சுவை மேலானதா என அவர்களைக் கேட்போமாகில் ஆம் என்றே சொல்வர். ஏனென்றால் தாய்பாஷை பேசத்தான் அவர்களுக்குத் தெரியும். அதன் சுவையை அநுபவித்தவர்கள் அல்ல. இந்தப் பழக்கம் ஒழிந்ததானால் நம்மிடமுள்ள அடிமைப் புத்தியும் விலகிவிடும் எனவே கருதுகிறேன்.

வாழ்க்கையை எடுத்துக் கொள்ளலாம். உயர்ந்த அந்தஸ்திலிருக்கும் குடும்பத்திலுள்ள பெண்கள் தங்களுடைய உறவினர் நெருங்கிய உறவினர் தாழ்ந்த அந்தஸ்தி லிருந்தால் அவர்களைத் தங்கள் உறவினர் எனக் கூறுவதே அவமானமெனக் கருதுகின்றனர். இந்தக் குணம் ஆடவரை விட பெண்களிடமே மலிந்திருக்கிறது. உயர்ந்த அந்தஸ்திலிருந்தால் மற்றவர் கேவலமானவர்கள் எனக் கூறுதல் முடியுமா? சேவகம் செய்பவர்களையே எடுத்துக்கொள்ளலாம். கவர்னர் முதல் சேவகன் வரை சேவகம் என்ற பெயர்தானே? படிப்புக்கும், சிபார்சுக்கும் பணத்திற்கும் ஏற்றபடி உத்யோகம் கிடைக்கிறது. இதை இல்லையென்று மறுக்க முடியுமா? சேவகம் செய்வதில் உயர்ந்தது தாழ்ந்தது எனப் பகுப்பது பகுத்தறிவாகுமா என நினைத்துப் பாருங்கள். உலகமே அன்பின் குடையில் நடைபெற வேண்டியிருக்கும் பொழுது இம்மாதிரி செய்தல் கூடாது. அந்தஸ்து பெரிதாயிருந்தால் பலரும் சுற்றிப் பிடுங்கித் தின்னப் பார்ப்பது யாருக்கும் தெரியாம லிருக்காது. உறவினருக்கு அதைச் செய்வதுதானே—அதுவும் இவர்கள் உதவி தேவையானவர்களுக்குத்தான். உலகமே அநித்யம். வாழ்வு நிச்சயமா? உங்களை வேண்டுவதெல்லாம் அன்புடன் பேசும்படிதானே! அதிலும் சிவர் பின்வாங்குகின்றனர். இதனை நினைத்துப் பார்த்தால் எவ்வளவு கவலை ஏற்படுகிறது என்பது சொல்லுந் தரமல்ல.

நான் இப்படியே பேசிக்கொண்டு போனால் அதிக நேரமாகிவிடும். என் சகோதரிகளாகிய உங்களை வேண்டுவது ஒன்று. அதாவது கூடியவரையில் பிறருக்குத் துன்பம் நேரிடாதவகையில், அன்புடன் தங்கள் வாழ்நாட்களைக் கழிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். உங்களுடைய நலங்களுக்காகப் பாடு பாடுங்கள். அதில் வெற்றி எய்துங்கள். கண்டவற்றிற் கெல்லாம் போட்டி போடுவதோ, குடும்ப பாரம் தெரியாமல் நடந்துகொள்வதோ கூடாது. "மலர்ந்த முகமே வாழ்க்கையின் இன்பம்" என்று தமிழில் ஒரு வாசகமுண்டு. குடும்பத்தை ஆனந்தத்தில் வைத்திருப்பதும், கவலையில் ஆழ்த்துவதும் சகோதரிகளாகிய உங்கள் கையில்தா னிருக்கிறது. ஆடவர்கள் பல விஷயங்களில் தவறி நடக்கலாம். அவர்களைச் சீர்திருத்துவதும் உங்கள் கடமை. என் பேச்சை பொறுமையுடன் கேட்டதற்காக என் வணக்கம்" என முடித்தான் வாசு. (கரகோஷம்) அக்ராசனர் உத்திரவுப்படி பூர்ணிமாதேவி பேச எழுந்தாள். "சகோதர சகோதரிகளே! எனக்கு முன்பு மிஸ்டர் வாசுதேவ் அவர்கள் பேசினார்கள். மிக அழகுபட கருத்துக்களை உதிர்த்தார். என்னால் அதுபோன்று முடியுமென நான் நம்பவில்லை. உத்யோக விஷயமாய் அவர்கூறியது பொருத்தமாக இருக்கலாம். ஆனால் என் அபிப்ராயத்தில், அரசியல் வாழ்விலேயே தியாக புத்தியுடன் நடந்து கொள்ளவேண்டும். உத்யோகமே விரும்புதல் கூடாது. அத்யாவசியமானவர் மட்டில் உதயோகம் செய்தால் போதுமென்பதே என் கருத்து.

(தொடரும்.)

---

## தாரண ௵ ஆனி௴ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடிகாரமணி-சென்னை காலை 6½-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க. |
| 1 | 17 | 28 | 48 | 59 | 48 | 334 | 16 | 110 | 38 | 41 | 12 | 119 | 22 | 56 | 15 | 66 | 13 | 96 | 30 |
| 2 | 17 | 32 | 44 | 60 | 45 | 348 | 26 | 110 | 44 | 42 | 54 | 119 | 31 | 57 | 29 | 66 | 21 | 96 | 27 |
| 3 | 17 | 36 | 41 | 61 | 42 | 2 | 25 | 111 | 20 | 44 | 41 | 119 | 40 | 58 | 42 | 66 | 29 | 96 | 24 |
| 4 | 17 | 40 | 37 | 62 | 39 | 16 | 24 | 111 | 55 | 46 | 29 | 119 | 50 | 59 | 56 | 66 | 37 | 96 | 21 |
| 5 | 17 | 44 | 34 | 63 | 36 | 30 | 03 | 112 | 31 | 48 | 22 | 119 | 59 | 61 | 09 | 66 | 48 | 96 | 18 |
| 6 | 17 | 48 | 30 | 64 | 34 | 43 | 42 | 113 | 07 | 50 | 15 | 120 | 09 | 62 | 23 | 66 | 53 | 96 | 14 |
| 7 | 17 | 52 | 27 | 65 | 31 | 56 | 52 | 113 | 43 | 52 | 12 | 120 | 19 | 63 | 36 | 67 | 01 | 96 | 11 |
| 8 | 17 | 56 | 23 | 66 | 29 | 70 | 02 | 114 | 18 | 54 | 10 | 120 | 29 | 64 | 50 | 67 | 08 | 96 | 07 |
| 9 | 18 | 00 | 20 | 67 | 26 | 82 | 40 | 114 | 54 | 56 | 30 | 120 | 39 | 66 | 04 | 67 | 16 | 96 | 04 |
| 10 | 18 | 04 | 16 | 68 | 23 | 95 | 17 | 115 | 30 | 58 | 50 | 120 | 49 | 67 | 18 | 67 | 24 | 96 | 01 |
| 11 | 18 | 08 | 13 | 69 | 21 | 107 | 27 | 116 | 06 | 60 | 38 | 120 | 59 | 68 | 31 | 67 | 31 | 95 | 58 |
| 12 | 18 | 12 | 09 | 70 | 19 | 119 | 36 | 116 | 41 | 62 | 26 | 121 | 10 | 69 | 45 | 67 | 39 | 95 | 55 |
| 13 | 18 | 16 | 06 | 71 | 16 | 131 | 29 | 117 | 17 | 64 | 34 | 121 | 20 | 70 | 59 | 67 | 47 | 95 | 52 |
| 14 | 18 | 20 | 02 | 72 | 12 | 143 | 22 | 117 | 53 | 66 | 43 | 121 | 30 | 72 | 13 | 67 | 55 | 95 | 48 |
| 15 | 18 | 23 | 59 | 73 | 09 | 155 | 16 | 118 | 39 | 68 | 53 | 121 | 40 | 73 | 26 | 68 | 03 | 95 | 45 |
| 16 | 18 | 27 | 56 | 74 | 07 | 167 | 10 | 119 | 06 | 71 | 04 | 121 | 51 | 74 | 40 | 68 | 10 | 95 | 42 |
| 17 | 18 | 31 | 52 | 75 | 04 | 179 | 23 | 119 | 42 | 73 | 29 | 122 | 02 | 75 | 54 | 68 | 18 | 95 | 39 |
| 18 | 18 | 35 | 49 | 76 | 01 | 191 | 37 | 120 | 18 | 75 | 55 | 122 | 13 | 77 | 08 | 68 | 26 | 95 | 36 |
| 19 | 18 | 39 | 45 | 76 | 58 | 204 | 26 | 120 | 54 | 77 | 50 | 122 | 24 | 78 | 21 | 68 | 34 | 95 | 33 |
| 20 | 18 | 43 | 42 | 77 | 56 | 217 | 15 | 121 | 31 | 79 | 46 | 122 | 35 | 79 | 35 | 68 | 41 | 95 | 29 |
| 21 | 18 | 47 | 48 | 78 | 53 | 230 | 47 | 122 | 07 | 81 | 55 | 122 | 46 | 80 | 49 | 68 | 49 | 95 | 26 |
| 22 | 18 | 51 | 35 | 79 | 50 | 244 | 20 | 122 | 43 | 84 | 04 | 122 | 57 | 82 | 03 | 68 | 57 | 95 | 23 |
| 23 | 18 | 55 | 31 | 80 | 47 | 258 | 31 | 123 | 19 | 86 | 10 | 123 | 08 | 83 | 17 | 69 | 05 | 95 | 20 |
| 24 | 18 | 59 | 28 | 81 | 44 | 272 | 42 | 123 | 56 | 88 | 17 | 123 | 19 | 84 | 30 | 69 | 12 | 95 | 17 |
| 25 | 19 | 03 | 24 | 82 | 41 | 287 | 15 | 124 | 32 | 90 | 21 | 123 | 30 | 85 | 44 | 69 | 20 | 95 | 14 |
| 26 | 19 | 07 | 21 | 83 | 39 | 301 | 48 | 125 | 09 | 92 | 24 | 123 | 41 | 86 | 58 | 69 | 28 | 95 | 10 |
| 27 | 19 | 11 | 17 | 84 | 36 | 316 | 20 | 125 | 45 | 94 | 25 | 123 | 52 | 88 | 11 | 69 | 36 | 95 | 07 |
| 28 | 19 | 15 | 14 | 85 | 33 | 330 | 52 | 126 | 22 | 96 | 25 | 124 | 04 | 89 | 25 | 69 | 43 | 95 | 04 |
| 29 | 19 | 19 | 10 | 86 | 30 | 345 | 06 | 126 | 59 | 98 | 22 | 124 | 16 | 90 | 39 | 69 | 51 | 95 | 01 |
| 30 | 19 | 23 | 07 | 87 | 28 | 359 | 20 | 127 | 36 | 100 | 19 | 124 | 28 | 91 | 53 | 69 | 59 | 94 | 58 |
| 31 | 19 | 37 | 03 | 88 | 25 | 13 | 11 | 128 | 13 | 102 | 12 | 124 | 40 | 93 | 07 | 70 | 07 | 94 | 54 |
| 32 | 19 | 31 | 00 | 89 | 22 | 27 | 03 | 128 | 49 | 104 | 05 | 124 | 51 | 94 | 21 | 70 | 14 | 94 | 51 |

**ஆகாயக் காட்சி:-**
- 6௳ பின் இரவு மணி 1-48க்கு சசிக்கு வடக்கில் பா 3 - 16ல் புதனும்,
- 7௳ மாலை ,, 6-42க்கு ,, ,, பா 3 - 25ல் சுக்ரனும்,
- 7௳ பின் இரவு ,, 1-02க்கு ,, ,, பா 2 - 20ல் சனியும்,
- 11௳ முன் ,, ,, 11-34க்கு ,, ,, பா 0 - 06ல் குஜனும்,
- 12௳ ,, ,, ,, 7-38க்கு ,, தெற்கில் பா 1 - 16ல் குருவும், சந்திர சமாகமம்.

**பிரவேசங்கள் முதலியன:—** 1௳ முற்பகல் மணி 11-45க்கு சூர்யன் மிதுனத்திற்கும், 19௳ மாலை மணி 6-33க்கு குஜன் சிம்மத்திற்கும், 10௳ முற்பகல் மணி 11-49க்கு புதன் மிதுனத்திற்கும், 24௳ பின் இரவு புதன் கடகத்திற்கும், 6௳ காலை மணி 7-47க்கு குரு சிம்மத்திற்கும், 4௳ காலை சுக்ரன் மிதுனத்திற்கும் பிரவேசமாகின்றன. 7௳ புதன் கிழக்கில் மகாஸ்தமனம். 32௳ மேற்கில் உதயம். 11௳ முதல் 18௳ வரை பாநுமத்யம்.

* அயனாம்சம் பா-22 கலை-56 விகலை 57·6418 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† [illegible] பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

தாரண௵ ஆனி௴ கலியுகாதி 5046, சாலிவாகனம் 1867
பசலி 1353-54, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1363
இங்கிலீஷ் 1944௵ ஜூன்௴—1944௵ ஜூலை௴

| ஆனி௴ | ஜூன் ௴ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | புத | அ6-38 | உட் 52-48 | சி52-48ம | ஷடசீதி புண்ய காலம் |
| 2 | 15 | வியா | நவ0-16 | ரே49-13 | சி49-13அ | அவமாகம் |
| | | | தச54-25 | | | [ஏகாதசி |
| 3 | 16 | வெள் | ஏ49-47 | அசு45-36 | அ45-36சி | யோகினி ஏகாதசி-சர்வமத்வ |
| 4 | 17 | சனி | து45-43 | பர43-12 | சி43-12அ | ஆராய்ச்சிகள் |
| 5 | 18 | ஞா | திர42-05 | கி❊41-55 | சித்60 | பிரதோஷம் கிருத்திகை விரதம் |
| 6 | 19 | திங் | சசி39-37 | ரோ42-07 | அமி60 | மாஸ சிவராத்திரி |
| 7 | 20 | செவ் | அ● 38-25 | மிரு42-36 | சி42-36ம | சர்வத்ர அமாவாஸ்யை |
| 8 | 21 | புத | பிர39-11 | திரு44-25 | சித்60 | ஆஷாட சுத்தம் |
| 9 | 22 | வியா | துதி40-13 | புன47-27 | அமி60 | சந்திர தர்ஸனம் |
| 10 | 23 | வெள் | திரு42-37 | பூச52-13 | சி52-13ம | ஸத்யாதி ராஜ தீர்த்தம் |
| 11 | 24 | சனி | சது46-17 | ஆ57-37 | ம57-37அ | மாஸ சதுர்த்தி விரதம் |
| 12 | 25 | ஞா | பஞ்51-03 | மக60-00 | மர60 | ஸ்கந்த பஞ்சமி |
| 13 | 26 | திங் | சஷ்55-48 | மக3-35 | ம3-35சி | குமார சஷ்டி |
| 14 | 27 | செவ் | சப்60-00 | பூர10-12 | சி10-12அ | வைவஸ்வத ஸப்தமி |
| 15 | 28 | புத | சப்0-33 | உத்16-51 | அ16-51ம | மந்திரார்த்தங்கள் |
| 16 | 29 | வியா | அஷ்5-27 | அ22-48 | சித்60 | ஆராய்ச்சிகள் |
| 17 | 30 | வெள் | நவ9-36 | சித்28-13 | சித்60 | |
| 18 | 1 | சனி | தச12-33 | சு32-26 | சித்60 | |
| 19 | 2 | ஞா | ஏ13-47 | வி34-47 | மர60 | |
| 20 | 3 | திங் | துவ14-24 | அ36-35 | சித்60 | |
| 21 | 4 | செவ் | திர13-51 | கே37-13 | ம37-13அ | |
| 22 | 5 | புத | ச○11-25 | மூல36-33 | ம36-33அ | |
| 23 | 6 | வியா | பௌ7-48 | பூ34-51 | சித்60 | |
| 24 | 7 | வெள் | பிர3-27 | உத்32-27 | சி32-27ம | |
| | | | துதி58-53 | | | |
| 25 | 8 | சனி | திரு53-24 | திரு28-48 | சித்60 | ஸ்ரீவிஜயதீர்த்த புண்யதினம் |
| 26 | 9 | ஞா | சது47-23 | அ25-17 | ம25-17சி | ஸங்கட சதுர்த்தி |
| 27 | 10 | திங் | பஞ்41-23 | சத21-37 | சி21-37ம | லலித கலை பயில |
| 28 | 11 | செவ் | சஷ்35-22 | பூர17-23 | ம17-23அ | ஆயுதம் பயில, நவக்கிரக சா |
| 29 | 12 | புத | சப்29-26 | உட்13-17 | சி13-17ம | விசேஷ சப்தமி [ந்தி |
| 30 | 13 | வியா | அ23-22 | ரே9-35 | சி9-35அ | ருத்ரஸாவர்ணி மனு |
| 31 | 14 | வெள் | நவ18-38 | அசு5-58 | அ5-58சி | காவியுஞ் செய்ய |
| 32 | 15 | சனி | தச14-24 | ப❊3-37 | சி3-37அ | கிருத்திகை விரதம் |

(Rows 18–32, ஜூன் ௴ column: 1944௵ ஜூலை௴)

| | | ஜ-பு-சு | சனி |
|---|---|---|---|
| | 1-மிது-சூ<br>5-சி-குரு<br>10-மிது-புத<br>19-சிம்-செ | | செ<br>கு<br>ரா |
| கே | 24-கட-புத<br>28-கட-சுக்<br>32-கட-சூ | | |

Edited, Printed & Published by N. Munisawmy Mudaliar,
At The “Ananda Bodhini” Press,
No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.

# காப் கியூர் என்னும் க்ஷய அரி

கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி, இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான ஈழை இருமல், தொண்டை எரிச்சல், தொண்டைக் கரகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் நனைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் இது கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை தூங்கச் செய்யும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1.

## ஜி. கியூர்

### இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் தாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் கள்ளநோய், நீரடைப்பு, சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை நீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக் கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

# மயிர் போக்கும் சோப்



இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தில் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழித்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழப்பாக விருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் முதலியவை இரா.

3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை ரூபா 1.

# மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய யிடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து கழுவினால் மயிர் போய்விடும். புட்டி 1-க்கு விலை அணா 8.

---

தனலட்சுமிகம்பெனி, நெ: 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.